# பகிரங்க விசாரணை செய்!


விலை 3 அணு Phone : 85777 இலங்கையில் 25 சத"

# ஜனசக்தி

(கம்யூனிஸ்ட் கட்சி வார இதழ்)

மலர் 10] ஞாயிறு 22—8—54 [இதழ் 48


## திரு-தமிழகப் போராட்டத்திற்கு ஆதரவு தர வாரீர்

திண்டுக்கல்லில் பேசிய பட்டம் தாணுப்பிள்ளை திரு-தமிழகத்தில் அவரது போலீஸ் பேய்கள் புரியும் கொலைத் தாண்டவம் நியாயமான அவசியமான நடவடிக்கை என்று அகங்காரத்துடன் கூறினர். அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டவே 11 உயிர்களின் ரத்தத்தைக் குடித்ததாகக் கொக்கரித்தார். பேய்த்தனமான போலீஸ் நர்த்தனமே பிரஜா சோஷியலிஸம், நிரபராதிகளைச் சுட்டுக் கொல்வதே பிரஜா சோஷியலிஸம் என்பதை திண்டுக்கல்லில் நடந்த தமிழ்நாடு சோஷியலிஸ்டுகளின் தீர்மானம் ஊர்ஜிதம் செய்கிறது.

கொலை, கொள்ளை பலாத்காரம் செய்ய திரு-தமிழக மக்கள் தூண்டி விடப்பட்டனர் என்று அங்கு நடந்த மக்கள் போராட்டத்தைக் கண்டிக்கிறது அத்தீர்மானம். பட்டம் தாணுப் பிள்ளையின் அடக்குமுறையைக் கண்டிக்கவில்லை. மாறாக, போராடும் மக்களைக் கண்டிக்கிறது பிரஜா சோஷியலிஸ்டுத் தீர்மானம். தமிழ் மக்களின் எதிரிகள்; ஐக்கிய தமிழகத்தின் விரோதிகளே பிரஜா சோஷியலிஸ்டுகள் என்பது இதிலிருந்து அப்பட்டமாயிற்று.

திரு-தமிழகத்திலே நடந்ததென்ன?

11-8-54 புதனன்று திரு-தமிழகத்தில் நகரங்கள் முதல் குக் கிராமங்கள் ஈறாக எல்லா இடங்களிலும் ஜனசமுத்திரமென மக்கள் திரண்டெழுந்து மிக அமைதியான முறையிலே ஊர்வலங்கள், சாத்வீக மறியல்கள், பொதுக்கூட்டங்கள் நடத்தி "திரு-தமிழக விடுதலை தினம்" கொண்டாடினர்.

### நீசத்தனமான அடக்குமுறை!

தமிழ் தேசிய இனத்தின் ஜனநாயக கோரிக்கையை அங்கீகரிக்க மறுத்து வந்திருக்கிற பி. சோ. சர்க்கார் திரு-தமிழக ஜன சக்தியின் இந்த உறுதியான எழுச்சியை எந்த விதத்திலும் அடக்கி ஒடுக்க வேண்டும் என்று திட்டமிட்டது. திரு-கொச்சியின் சரித்திரத்தில் இதற்கு முன் என்றுமே நடந்திராத முறையில் பாசிச நர வேட்டையாடியுள்ளது.

சமாதான ரீதியில் மிகவும் கட்டுப்பாடுடன் ஊர்வலங்கள் நடத்திய நாகர்கோவில் மாணவர்களை போலீஸார் மிருகத்தனமாகத் தாக்கினர். இதனால் பல மாணவர்கள் படுகாயமுற்றனர்.

மார்த்தாண்டத்திலும் போலீசார் மாணவர்களைப் படுமோசமாகத் தாக்கினர். மேலும் எவ்வித முன்னறிவிப்புமின்றி துப்பாக்கிப் பிரயோகம் செய்து பலரைச் சுட்டு வீழ்த்தியுள்ளனர்.

புதுக்கடை என்னும் இடத்தில் பொதுக்கூட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே போலீசார் மேடைமீது ஏறி நின்று சுற்றிலுமுள்ள மக்களைச் சுட்டுத் தள்ளினர் துப்பாக்கிப் பிரயோகம் செய்யப் போகிறோம் கலைந்து செல்லுங்கள் என்று போலீசார் எவ்வித முன்னெச்சரிக்கையும் கொடுத்ததாகத் தெரியவில்லை. மக்களை விரட்டவேண்டுமென்றால் வெறும் கண்ணீர்ப்புகை பிரயோகம்செய்தாலே அவர்கள் கலைந்து சென்றிருப்பார்கள்.

### பாஸிஸ்டுகளையும் மிஞ்சினர்!

ஆனால் பி. சோ. சர்க்காரின் போலீஸார், பாஸிஸ பேயாட்சி நடக்கும் நாடுகளைவிடவும் படுமோசமாக மக்களை கொன்று குவித்திருக்கின்றனர். துப்பாக்கிப் பிரயோகம் நடத்தப்பட்ட இடங்களில் எங்குமே அதற்குரிய தேவை ஏற்படவில்லை. ஸ்ரீ பட்டம் தாணுபிள்ளையின் பொறுப்பற்றதும், துவேஷம் நிறைந்ததுமான, பழவங்காடி மைதான பிரசங்கத்தைத் தொடர்ந்து இதுவரை நடைபெற்றிருக்கும் சம்பவங்கள், வேண்டுமென்றே திட்டமிட்டு நடத்தப்பட்டவை என்பது வெளிப்படை.

### பெண்களையும் தாக்கினர்!

துப்பாக்கிப் பிரயோகத்தைத் தொடர்ந்து போலீஸார், வீடுகளில் பலாத்காரமாக புகுந்து அங்கிருந்த ஆண், பெண், வயோதிகர், குழந்தைகள் ஆகிய நிரபராதிகளை மிருகத் தனமாக நையப் புடைக்கவும், பலரை கைதுசெய்து பகிரங்கமாகவும், லாக்கப்புக்குள்ளேயும் கொடூரமான முறையில் தாக்கவும் செய்திருக்கின்றனர்.

12-8-54 காலையில் மார்த்தாண்டம் சென்ற கம்யூனிஸ்ட் தோழர் சோமசுந்தரத்தை யாதொரு காரணமுமின்றி கைது செய்து காட்டுமிராண்டித் தனமாகத் தாக்கியிருக்கின்றனர்.

நாகர்கோவில் நகரிலுள்ள வாடகை மோட்டார்களையெல்லாம் நிர்ப்பந்தமாக போலீஸ் ஸ்டேஷனுக்கு கொண்டுசென்று அங்கேயே நிறுத்தி வைத்திருக்கின்றனர். பொதுவாக மக்களிடையே பெரும் பீதியையும் மனக்கலக்கத்தையும் ஏற்படுத்தும் நடவடிக்கைகளை பி. சோ. சர்க்கார் கையாண்டு வருகிறது.

### போராடும் மக்களைப் பாராட்டுகிறோம்!

நிலைமை இவ்வாறிருந்தும்தான் செய்த அக்ரமங்களை மறைப்பதற்காக கம்யூனிஸ்ட் கட்சிமீது பழிசுமத்தி தான் செய்த குற்றங்களிலிருந்து தப்பிவிட திரு-கொச்சி பி. சோ. சர்க்கார் முயற்சிக்கின்றது. சர்க்கார் தரப்பில் சிறிதளவேனும் நீதியோ நேர்மையோ பொறுப்புணர்ச்சியோ இருக்குமானால் அது பாரபட்சமற்ற, உத்தியோகப்பற்றற்ற, பகிரங்க விசாரணை நடத்தி யார் குற்றவாளி என்பதை நிரூபிக்க முன்வருமா?

### கண்டனக் குரல் எழுப்புக!

பி. சோ. சர்க்காரின் போலீஸ் அட்டூழியங்களின் முன் அஞ்சாமலும் நிதானம் இழக்காமலும் உறுதியுடன் நிற்கும் திரு-தமிழக மக்களை பாராட்டுகிறோம். பி. சோ. சர்க்காரின் அநீதிகளை, அக்கிரமங்களை எதிர்த்து மக்கள், எங்கும் கண்டனக்குரல் எழுப்பவேண்டும்.

மார்த்தாண்டம் புதுக்கடை முதலிய இடங்களில் 11-8-54 புதனன்று நடந்த துப்பாக்கிப் பிரயோகங்கள் பற்றியும் இதர இடங்களில் நடந்த தடியடிகள் பற்றியும் பகிரங்க விசாரணை நடத்தி சம்பந்தப்பட்ட அதிகாரிகளை தண்டிக்கவேண்டுமென்று எல்லா அரசியல் கட்சிகளும், தொழிற்சங்கங்களும், இதர ஸ்தாபனங்களும், பொதுமக்களும் பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள், ஆர்ப்பாட்டங்கள் வாயிலாக கண்டனக்குரல் எழுப்பவேண்டும். பி.சோ. சர்க்காரின் மிருகத்தனமான போக்கையும், இதற்கு ஆதரவாக மத்திய, சென்னை சர்க்கார்கள் இருப்பதை வன்மையாகக் கண்டிக்க முன்வரவேண்டுமென்றும் அறைகூவுகிறோம்.

★ பகிரங்க விசாரணை வேண்டும்.

★ உயிர்நீத்த தியாகிகளின் குடும்பங்களுக்கும் படுகாயமுற்றோருக்கும் நஷ்ட ஈடு கொடு!

★ மொழிவழி மாகாண கோரிக்கையை ஒப்புக்கொள்; உடனடியாக எல்லைக் கமிஷன் நிறுவுக!

★ ஐக்கிய தமிழகம் அமைத்தே தீருவோம்! அதைத் தடுக்கும் சக்திகளை தகர்ப்போம்!!

## பெருச்சாளிகளை விரட்டுவோம்!

## இணைப்புக் கிளர்ச்சி தொடரட்டும்

### சமரசப் பேச்சின் இரகசியம் என்ன என்பதை இந்திய சர்க்கார் வெளியிடுமா?

*பிரெஞ்சிந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் காரிய தரிசி தோழர் வி. சுப்பையா பத்திரிகைகளுக்கு பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார் :—*

பிரெஞ்சு அதிகாரிகள் ஆகஸ்ட் 15-ந்தேதி மூட்டை மூடிச்சுடன் வெளியேறி விடுவார்கள், ஆகஸ்ட் 14-ந் தேதிக்குள் நடைமுறையில் அதிகார மாற்றம் ஏற்பட்டுவிடும் என்று பத்திரிகைகளில் பிரமாதமாக ஹேஷ்யங்கள் பறந்தன. இதை நம்பிய சில அரசியல் கட்சிகளும்—பிரெஞ்சிந்தியாவிலுள்ள அதிகார பூர்வமான வட்டாரங்களும் பிரெஞ்சு ஆதிக்கத்தை எதிர்த்து நடைபெறும் கிளர்ச்சிகளை நிறுத்தும்படி கோரின. பரிபூர்ண அமைதியை வேண்டின. தப்பித் தவறி ஏதாவது நேரிட்டால் சமரசச் சூழ்நிலை கெட்டுவிடும் என்று எச்சரித்தன.

அதிகார மாற்றம் நடைமுறையில் ஏற்படுவதற்கான இறுதி தினமான ஆகஸ்ட் 15ம் வந்து போய்விட்டது. ஆனால் கிளர்ச்சிகளை நிறுத்தி வைக்கும்படி கோரிய வட்டாரங்கள் சமரசம் இதோ அதோ! என்று அதே நிலைமையை நீடிக்க விரும்புகிறார்கள். எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் புது டில்லி நிருபர் "விரைவில் பிரெஞ்சிந்திய நிட்டுக்களைத் திருப்பிக்கொடுப்பதற்கான உருப்படியான திட்டம்பற்றி இந்தியாவும் பிரான்சும் ஒப்புக் கொண்டுவிட்டதாக"க் கூறுகிறார். பிரெஞ்சிந்தியப் பிரச்னை "கிட்டத்தட்ட விரைவில்" சமரசமாகி விடும் என்கிறார் நேரு.

### பெருங் குழப்பம்

ஆகஸ்ட் 12-ந் தேதியன்று பிரெஞ்சு பார்லிமெண்டில் நடந்த விவாதத்தின் அறிக்கையைப் பார்க்கும்போது இந்தியப் பத்திரிகைகளில் எழுப்பப்படும் ஹேஷ்யங்களுக்கும் நம்பிக்கைகளுக்கும் இடமில்லை என்பது தெரிகிறது. எனவே நிலைமை பெருங் குழப்பமாக இருக்கிறது. புதுவையில் கூட்டுச் செயல் கமிட்டியின் தலைமையில் ஆகஸ்ட் 9-ந்தேதி விடுத்த அறைகூவலை ஒட்டி சரித்திரப் பிரசித்தமான பொதுவேலை நிறுத்தமும் வெகுஜன ஆர்ப்பாட்டமும் நடைபெற்றன. ஆலைத்தொழிலாளர், மாணவர், வர்த்தகர்கள் உட்பட்ட சகல பகுதி மக்களும் அணிவகுத்து வந்து பங்குகொண்டனர். இந்தப் போராட்டத்தை நாளுக்குநாள் உக்ரப்படுத்தி புதுவையிலிருந்து பிரெஞ்சு ஆதிக்கத்தை முற்றாக ஒழித்துக்கட்ட வேண்டும் என்றே இது திட்டமிடப்பட்டது. இந்தியாவுடன் இணைப்பை ஆதரிக்கும் சில கட்சிகள் என்றுங் கண்டிராத அளவு ஓங்கி நின்ற இப்போராட்டத்தைச் சீர்குலைக்க முயன்று தோல்வியுற்றன. பின்னால் இந்தச்சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த போராட்டத்தை சமரசத்துக்குப் பாதகமான செயலாகச் சித்தரித்துக் காட்டின.

### சமரச சாகசங்கள்

பிரெஞ்சிந்தியப் பிரச்னையை சமரசமாகத் தீர்ப்பதற்கு கம்யூனிஸ்ட் கட்சி ஒருக்காலும் எதிராக இருந்ததில்லை. ஆனால் விடுதலைக் கிளர்ச்சிகளை முற்றாக நிறுத்தி வைக்கப்பட வேண்டும் என்பதை நாம் ஏற்க முடியாது. கடந்த ஏழு வருடங்களாக பிரெஞ்சு ஏகாதிபத்தியம் சமரசம் செய்வதாக சாகசம் நடத்தி மக்களின் எழுச்சியைத் தணிய வைத்து இறுதியாகப் போராட்டத்தையே சீர்குலைத்துவந்துள்ள, கடுமையான நஷ்டங்களை விளைத்துள்ள அனுபவங்களை ஒரு விநாடியும்கூட மறக்கமுடியாது. இதனால்தான் பிரெஞ்சு ஆதிக்கம் சமரசம் பேசுவதாகக் கூறியபொழுதெல்லாம், அதிலே பூர்ண நம்பிக்கை வைத்துவிடாதீர்கள். போராட்டத்தைத் தளர்த்திவிடாதீர்கள் என்று பிரெஞ்சிந்தியாவிலுள்ள மக்களையும் அரசியல் கட்சிகளையும் ஒவ்வொரு தடவையும் கம்யூனிஸ்ட் கட்சி எச்சரித்துவந்திருக்கிறது. பிரெஞ்சிந்தியாவுக்குள் விடுதலைப் போராட்டம் தீவிரப்படுவது சமரசத்தை எந்த விதத்தில் பாதிக்கும் என்பது எமக்குப் புரியவில்லை.

இந்தியாவிலுள்ள பிரெஞ்சுத் திட்டுகளைப்பற்றிக் கிளம்பியுள்ள ஹேஷ்யங்கள் மக்களிடை உறக்கத்தை உண்டுபண்ணி சமரசம் கைக்குள் இருக்கிறதென்ற மோகத்தை வளர்க்கின்றன. ஒரு புறம் இந்த உறக்கத்துக்கு இடந் தேடும் தறுவாயில் மறுபுறம்

(12-ம்பக்கம் பார்க்)

**தலையங்கம்** 22-8-54

# ஜில்லா போர்டு தேர்தல்

ஜில்லா போர்டு தேர்தல்கள் செப்டம்பர் மாதத்தில் ஆரம்பமாகின்றன. ஜாதி வெறியர்களும், சுய நலமிகளும், ஊழல் பேர் வழிகளும், பகற் கொள்ளைக்காரர்களும், நிலப்பிரபுக்களும், பாரபட்சக்காரர்களும் தேர்தலில் போட்டியிட முஸ்தீபுகள் செய்து வருகிறார்கள். அவர்கள் ஜில்லா போர்டுகளைப் பாசறையாகக் கொண்டு, விவசாயிகளிடமிருந்து வசூலிக்கப்பட்ட ஜில்லா போர்டு பொக்கிஷப் பணத்தை, தம் பாட்டன் வீட்டுச் சொத்தாகக் கருதி, பல வழிகளிலும் கொள்ளையடித்து சீமான் ஆனவர்கள். அல்லது அந்த மாதிரி கொள்ளையடிக்க ஆசைப்படும் பெத்த மனிதர்கள்! அவர்கள் அனைவரையும் காங்கிரஸ் கட்சி அபேட்சகராக நிறுத்தியுள்ளது. அந்த அபேட்சகர்களெல்லாம், பத்தாயிரக்கணக்கான ரூபாய்களை வாரியிறைக்கப் பண மூட்டையும் கையுமாய் வருகிறார்கள்.

இந்தத் தேர்தலில் எழுதப் படிக்கத் தெரியாத ஏழை மக்கள், பெருவாரியாக பங்கெடுத்துக் கொள்வார்கள் என்பதை உணர்ந்து பயந்த காங்கிரஸ் கட்சியார், அவர்களைக் குழப்புவதற்காக, பெட்டி முறையை மாற்றி, குறி போடும் முறையைக் கொண்டு வந்தார்கள். இதை ஆயிரமாயிரம் விவசாயிகள் கையெழுத்திட்டும் தீர்மானங்கள் நிறைவேற்றியும் ஆட்சேபித்தார்கள். சட்ட சபையில் எதிர்க் கட்சியார் கண்டித்தார்கள். ஹிந்து போன்ற பத்திரிகைகளும் இதைக் கண்டித்தன. எல்லோருடைய கண்டனங்களையும் காலில் போட்டு மிதித்து விட்டு, படிப்பில்லாதவர்களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க இந்த மாதிரியான தேர்தல் முறையே சரியானது என்று அகம்பாவத்துடன் கூறுகிறார்கள் காங்கிரஸ் மந்திரிகள். தங்கள் கையில் அதிகாரம் இருக்கிறது என்ற ஆணவத்தால் அவர்கள் அப்படிச் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட தேர்தல் முறையைக் கொண்டு வந்தவர் உழைப்பாளி மக்களுக்குத் துரோகம் செய்து விட்டு காங்கிரஸ் கட்சியுடன் சேர்ந்து கொண்ட ராமசாமி படையாச்சியென்பதை யாரும் மறக்க மாட்டார்கள்.

காங்கிரஸை எதிர்த்து, கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நிற்பவர்களெல்லாம், கடந்த பல வருடங்களாக, விவசாயி மக்களுக்காகப் பாடுபட்டவர்கள், சிறைப்பட்டவர்கள்; சித்ரவதைக்கு உள்ளானவர்கள்; நிலவெளியேற்றத்தை எதிர்த்தும், கடன் ஒத்திவைப்புக்காகவும், பஞ்ச நிவாரணத்துக்காகவும், வரி வஜாவுக்காகவும்; கெடுபிடி வசூலை எதிர்த்தும் விவசாயிகள் நடத்திய மகத்தான போராட்டங்களில் முன் வரிசையில் நின்றவர்கள். பொதுஜன இயக்கத்தில் புடம் போடப்பட்டவர்கள்.

இப்படிப்பட்ட போராட்ட வீரர்களையும் நம் கட்சி ஆதரிக்கும் சுயேச்சை அபேட்சகர்களையும் தேர்ந்தெடுப்பதின் மூலம், மக்களின் உரிமைக் குரலை, ஜில்லா போர்டுகளுக்குள்ளும் கொண்டுபோக முடியும். அங்குள்ள பழம் பெருச்சாளிகளின் கொட்டத்தை அடக்கவும், ஜில்லா போர்டுகளின் மூலம் கிடைக்கக்கூடிய குறைந்தபட்ச நன்மைகளையும் பரிபூரணமாக மக்களுக்கே கிடைக்கச் செய்யவும் முடியும். ஆதலால், தமிழ்நாட்டு மக்களே! கம்யூனிஸ்ட் அபேட்சகர்களுக்கும், கம்யூனிஸ்ட் கட்சியால் ஆதரிக்கப்படும் நேர்மையாளர்களுக்கும் உங்களுடைய மதிப்பிற்குரிய வாக்குகளை அளிக்குமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

ஜில்லா போர்டுகளை மக்களின் நலன்களுக்காக உபயோகப்படுத்த நடக்கும் இந்தப் போராட்டத்தில் கட்சி அங்கத்தினர்களும் அனுதாபிகளும் முழு சக்தியையும் உபயோகிக்க முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

## இலங்கை இந்திய அகதிகள்

இலங்கை சர்க்காருக்கும் இந்திய சர்க்காருக்கும் இடையே ஏற்பட்ட புதுடெல்லி ஒப்பந்தத்தின் விளைவாகவும் அதை ஒட்டி எடுக்கப்பட்டுவரும் ஒருதலைப்பட்சமான நடவடிக்கைகளின் காரணமாகவும் இலங்கையில் தற்காலவாசிகளாகக் கருதப்படும் ஆயிரக்கணக்கான இந்தியர்கள் தாயகத்துக்குத் திரும்பிவருகிறார்கள். இவர்களில் முதல் கோஷ்டியாக சுமார் 5000 பேர்கள் வரப்போகும் சில நாட்களுக்குள் திரும்பிவிடுவார்கள். அவர்களது கதி என்ன ?

சென்னை சர்க்காரைப் பொறுத்தவரையில் இவர்கள் விஷயத்தில் மிகவும் உதாசீனமாக நடந்திருக்கிறது என்பது வெள்ளிடைமலை. இவர்களால் பிரச்சினை ஒன்றுமில்லை—இவர்கள் வருவது பற்றி விபரம் எதுவும் தெரியாது என்று நிதிமந்திரி சுப்பிரமணியம் பல முறை சட்டசபையில் அசட்டையாகப் பதில் கூறியிருக்கிறார். இப்போது இந்திய சர்க்காரே உத்தியோகபூர்வமாக இலங்கையிலிருந்து இந்தியர்கள் வரப்போவதைத் தெரிவித்திருக்கிறது. இப்போதுங்கூட முதல் மந்திரி காமராஜர் என்ன கூறுகிறார். வருகிறவர்கள் வெற்றிலைபாக்குக் கடை வைத்தவர்கள் - வியாபாரிகள் என்று தாமறிவதாகவும் இங்குவந்தால் அதே தொழிலைச் செய்யலாமென்றும் வேறு ஷாப்புச் சிப்பந்திகள் தொழிலாளர் போன்றோர் வந்தால்மட்டுந்தான் பிரச்சினை என்றும் பொறுப்பற்றமுறையில் சொல்லுகின்றார்.

தற்காலவாச பர்மிட்களை நீடிக்கமறுத்து அதன் விளைவாக நிர்ப்பந்தமாக இந்தியாவுக்குத் திரும்ப நேர்ந்துள்ள இலங்கைவாழ் இந்தியர்களில் மிகப் பெரும்பான்மையோர் தொழிலாளர்கள்; பல்வேறு தொழில்களிலே ஈடுபட்டிருப்பவர்கள். சொந்த சம்பாத்தியமாக எதுவும் சேர்த்து வைத்திராதவர்கள். பிறந்த நாட்டில் தொழில் இல்லாததால் கடல் கடந்து சென்றவர்கள். திரும்பிவரும் அவர்களுக்குத் தங்க இடங்கூட இல்லை. வேலையில்லாமல் இருக்கும் நாட்களில் உட்கார்ந்து சாப்பிடப் பொருளில்லை.

இத்தகைய சூழ்நிலையில் எக்காரணத்தைக் கொண்டும் இந்தப் பிரச்சினையில் ஏனோ தானோவாக இருப்பது கூடாது. அகதிகள் பிரச்சினையில் நம்நாட்டில் சென்ற காலத்தில் ஏற்பட்ட அனுபவங்கள் ஆழத் தழும்பேறி உள்ளன. அந்த சாபக்கேடுகளை மீண்டும் ஒரு முறை ஒத்திகை நடத்திப் பார்க்கவேண்டாம்.

இலங்கையிலிருந்து திரும்பும் அகதிகளுக்கு எவ்வித பாரபட்சமுமின்றி உடனடியாக உதவி நல்கவேண்டும். பின்னால் விவசாயத்தில் ஈடுபட விரும்புவோர்களுக்கு நிலமும் சாகுபடி செய்ய வசதிகளும் அளிக்கப்பட வேண்டும். தொழிலாளர்களுக்கு வேலை அல்லது நிவாரணம் கொடுக்கப்படவேண்டும். இதற்குப் பண நிலை அனுமதிக்கவில்லை என்று ஓலமிடாமல் மத்திய சர்க்காரிடமிருந்து மான்யம் பெற்று உதவவேண்டும். இந்த வழியில் சர்க்காரை நடவடிக்கைகள் எடுக்க நிர்ப்பந்திக்கும் வகையில் வெகு ஜனக் கிளர்ச்சி எழவேண்டும்.

**வாரக்குறிப்புகள்** 1954

## சாதனைகளின் சாயம் வெளுக்கிறது!

ஆகஸ்ட் 15-ந் தேதி இந்திய சுதந்திர தினம் கொண்டாடப்பட்டது. ஏழு வருடங்களுக்கு முன்னால் 1947ல் அதிகார மாற்றம் ஏற்பட்டபோது எத்தனை மகத்தான உத்வேகத்துடன் லட்சக் கணக்கான மக்கள் இந்த நாளிலே விழாக் கொண்டாடினார்கள்! ஆனால் இன்று ஏழு வருஷங்களுக்குப் பின்னால், காங்கிரஸ் அதிகார பீடத்தில் இருந்தும் அன்றைய ஆவேசமிருக்கிறதா? ஆர்வமிருக்கிறதா? உற்சாக மிருக்கிறதா? இல்லை இல்லை! ஏன் ?

டெல்லி செங்கோட்டையில் நடந்த சுதந்திர விழாவில் பிரதமர் பண்டித நேரு பேசினார், காலனி அடிமைத் தனத்திற்கு சாவுமணியடித்து விட்டதாகக் கூறினார். இந்தியாவின் பெயர் என்றென்றும் சமாதானத்திற்கான ஆக்கப் பணிகளுடன் இணைந்து நிற்க வேண்டும்; அழிவு வேலைகளுடன் கூடாது.. எல்லா மக்களுடனும் அன்புகொண்டு சாதானத்துடனும் நேசப் பண்புடனும் வாழும் முறையில் நமது உறவு இலங்க வேண்டும் என்று குறிப்பிட்டார். இதை நாம் வரவேற்கிறோம். ஆனால் பண்டித நேரு இத்தகைய முடிவை எடுப்பதற்கு மூலகாரணமாக இருந்தது இந்நாட்டு வெகு ஜனங்களின் இடைவிடாக் கிளர்ச்சியே என்பதை இந்த சந்தர்ப்பத்தில் நினைவுக்குக் கொண்டுவர வேண்டும். அதிகார மாற்றம் வந்தவுடன் அமெரிக்க ஜனநாயகத்தின்மேல் காதல் கொண்டு அந்தப் போக்கை எதிர்த்து நின்ற முற்போக்கு சக்திகளின் மேல் அடக்குமுறைகளைப் பொழிந்த சம்பவங்களை மக்கள் மறந்துவிடமாட்டார்கள்.

### புதிய இந்தியாவின் செய்தி

"எல்லா மக்களுக்கும் அரசியல் ரீதியாகவும், சமூக ரீதியாகவும் முடிந்த அளவுக்கு பொருளாதாரரீதியாகவும் சமமான உரிமைகள் அளிக்கப்பட வேண்டும் என்பதே புதிய இந்தியாவின் செய்தி" என்கிறார் நேரு. அதே பிரசங்கத்தில் இன்னுமோரிடத்தில் :—

"சகல மக்களும் சமூகரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் விமோசனம் பெற்றாலொழிய ஒரு நாடு பூர்ண சுதந்திரம் அடைந்ததாகக் கருதமுடியாது" என்கிறார்.

இந்த உண்மையைத்தான் நாம் வலியுறுத்திவருகிறோம். ஏழு வருடங்களுக்குப் பின்னால் எங்களுக்கு அரசியல் சுதந்திரம் மட்டுமே கிடைத்திருக்கிறது. இதை அடித்தளமாக்கி மற்ற சுதந்திரங்களைப் பெறவேண்டும் என்று யதார்த்த நிலைமையை ஒப்புக்கொள்ளுகின்றனர். சென்னைக் கூட்டத்தில் பேசிய முதல் மந்திரி காமராஜ நாடார் மகத்தான சாதனைகள் பெற்றுவிட்டதாகக் கூறி "செல்வம் இன்னும் பரவலாக விநியோகிக்கப்படவேண்டும். மக்கள் வாங்கும் சக்தி உயரவேண்டும்" என்று குறிப்பிட்டார். இந்தக் கொண்டாட்டம் காங்கிரஸ்காரர்களுக்கு மட்டும் உரியதல்லவென்றும் கம்யூனிஸ்ட்களும் பங்கெடுக்கலாம் எனவும் கூறினார். நல்ல காரியங்களிலே எல்லோரும் ஒத்துழைக்கும்படி கேட்டுக்கொண்டார்.

முதன் மந்திரியாரின் தாராள மனப்பான்மை சுதந்திர தினத்தன்றாவது கம்யூனிஸ்ட் எதிர்ப்பு ஐக்கிய முன்னணியிலிருந்து திசை திரும்பியதல்லவா ? ஏழு வருடங்களில் ஏனிந்தச் சோர்வு மக்களிடையே ஏற்பட்டது என்ற கேள்வியை பிரதமரும், முதல்வரும் அறியவேண்டுவது அவசியம்.

பொருளாதார சுதந்திரத்தைப் பெறுவதற்கு முட்டுக்கட்டையாக நிற்பது யார்? இந்த நாட்டில் பிரிட்டிஷ் மூலதனத்தின் பிடிப்புக்கும் கொள்ளைக்கும் இடம் கொடுத்திருப்பது யார்? நமது வர்த்தகத்தில் – லேவாதேவியில்– பெருந்தொழில்களில் எல்லாம் பிரிட்டன் ஆதிக்கம் வகிக்கிறது. நமது விளைபொருள்களின் விலைகளை நிர்ணயிப்பது ராலி பிரதர்ஸ் வால்காட் கம்பெனி போன்ற பிறதேசக் கம்பெனிகளே! நமது தேயிலை காப்பித் தோட்டங்களில் அவர்கள் ஆதிக்கமே. இது மட்டுமா ?

### வெள்ளையர் கொள்ளைக்குக் காவலா ?

தொழிலாளர் நலவுரிமைகளைப் பாதுகாக்கவோ, தேசநலனை ஒட்டியோ இந்த வெள்ளை முதலாளிகளின் மீது நடவடிக்கை எடுக்க நமது தேசிய சர்க்கார்கள் தயங்குவதும், மறுப்பதும் தன்மானமுள்ள எவருக்கும் வெறுப்பைக் கொடுக்கும். நஷ்டஈடு கொடுப்பதிலும் வெள்ளையர் சலுகைகளைக் காவல் காத்து நிற்பதிலும் கண்ணுங்கருத்துமாக இருக்கும் ஆட்சிகள் ரிசர்வ் நிதியிலிருந்து தொழிலாளருக்கு நஷ்டஈடு கொடுங்கள் என்றால் எப்படி முடியும் என்று முதலாளிகள் சார்பில் வாதாடும் காட்சியைக் காண்கிறோம். இவற்றை எல்லாம் கண்டு அந்நிய மூலதனத்தைப் பாதுகாத்து நிற்கிறீர்களே இதற்கா சுதந்திரம் என்று மக்கள் கேட்பது இயல்புதானே! அரசியலடிப்படையிலும் இன்று காமன் வெல்த்திலிருப்பது எத்தனை கழுத்தறுப்பாக வந்திருக்கிறதென்பதை பிரத்யட்சமாகக் காணலாம். மலாயாவில் தலையீட்டுக்கு கூர்க்காக்களை அனுப்புவது, கோவா விஷயத்தில் பிரிட்டன் தலையீடு, பிரிட்டிஷாருக்கு விசேஷ வர்த்தகச் சலுகைகள் இவை மட்டுமே உதாரணமாகக் காட்டப் போதுமானவை. இதை எல்லாம் விட முக்கியமாக இந்தியாவைத் தொழில் துறையில் பின் தங்கி நிற்கவைத்திருப்பதன் மூலம் பிரிட்டிஷ் ஆதீனத்திற்கு ஆயுள் நீடிக்கப்பட்டுள்ளது.

### ஜனப் பெருக்கத்தின்மீது வழி

விவசாயத் துறையில் நிலைமை என்ன? அடிப்படையான சீர்திருத்தங்களைச் செய்யாமல் ஜனப் பெருக்கத்தின்மீது பழி போடுகிறது ஆட்சி. உழுபவனுக்கு நிலம் கொடுத்து விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தாமல்—அவர்களது வாங்கும் சக்தியை அதிகரிக்காமல் உள்நாட்டில் தொழில் வளர்ச்சியைக் காண்பதென்பது குதிரைக் கொம்பே. விவசாயிகள் இயக்கங்கள் போராட்டங்களின் நிர்ப்பந்தத்தால் வந்த ஒரு சில சட்டங்களைத் தவிர உருப்படியான நிலச்சீர்திருத்தத்திற்கு காங்கிரஸ் கட்சி எதிர்ப்புச் செய்கிறது.

இதைக் கண்டு விவசாயிகள் காங்கிரஸ் ஆட்சி நிலப்பிரபுத்துவத்தின் நேசனாக இருக்கிறது என்று குற்றஞ் சாட்டினால் அதில் புதுமையுண்டோ? சட்டம் போலீஸ் அடக்குமுறைகள் எல்லாம் கஷ்டப்படும் விவசாயி மக்களைத் தாக்கவே உபயோகிக்கப்படுகின்றன வல்லவா ?

தொழிலாளர் விஷயத்திலே 'ரேஷனலைசேஷன்' என்ற பெயரால் ஆட்குறைப்பும் வேலைப்பளுவும் புகுத்தப்பட்டுள்ளன. ஆயிரக்கணக்கான தொழிலாளர் வேலையிழந்து தெருவலைகின்றார்கள். முதலாளிகள் லாபக் கொள்ளைக்குப் பாதுகாப்பளிக்கும் ஆட்சி தொழிலாளர் நலவுரிமைகளைப் பற்றிக் கண்ணடைத்து நிற்கிறது. மூடப்பட்டுள்ள தொழிற்சாலைகளை எடுத்து நடத்த ஆட்சியாளருக்கு ஆற்றல் இல்லை. சென்னை டிராம்வே இன்னும் பல தொழிற்சாலைகள், மில்கள் விஷயம் இதற்கு உதாரணம். எனவே தொழிற்சங்க உரிமை போன்ற மூலாதாரமான உரிமைகளைக் கூட அனுமதிக்காமல் கிளர்ச்சி என்றால் குண்டாந்தடியை நீட்டும் ஆட்சியை பெரு முதலாளிகளின் பாதுகாவலன் என்று தொழிலாளர் கண்டுகொண்டிருக்கிறார்கள் இதில் புதுமை என்ன ?

### மக்கள் கண்ணில் மண் தூவவா?

மொழிவழி மாகாணங்கள் விஷயத்தில் காங்கிரசின் போக்கு என்ன என்பதை இன்று திரு–தமிழகத்தில் காண்கிறோம். சென்றகால வாக்குறுதிகளைமீறி நேரடியாக மக்களுக்கு துரோகம். பலவேறு தேசிய இனங்களின் நலவுரிமைகள் காங்கிரசாட்சியால் பாதுகாக்கப்படமாட்டாது என்பது தெளிவாகிறது.

ஐந்து வருடத் திட்டங்கள் அதிசயங்கள் விளைத்துள்ளதாகப் பிரசாரத் தம்பட்டம் நடக்கிறது. 48 சத விகிதம் உற்பத்தி உயர்ந்துவிட்டதாகக் கூறுகிறார்கள். ஆனால் வேலையற்றோர்தொகை தீப்போல ஏறி வருகின்றது. கடந்த ஜூன் மாதத்திற்குப் பின் ஒரு மாதத்திற்குள் வேலை தேடித்தரும் காரியாலயத்தில் 5,48,394 பேர்கள் பதிவு செய்துகொண்டிருக்கிறார்கள். கிராமப்புறங்களில் 5 கோடியும், பட்டணங்களில் 60 லட்சம் பேரும் வேலையின்றித் திண்டாடுவதாக காங்கிரஸ் வட்டாரங்களிலேயே கணக்குக் கொடுக்கப்படுகிறது. வேலை கிட்டாமலும், பிழைக்க வழியின்றிப் பட்டினியுடன் மல்லாடி இறுதியாகத் தற்கொலை செய்து கொண்டோர் தொகை சென்ற 1953 ஒரு ஆண்டில் மட்டுமே மூவாயிரத்தை மீறிவிட்டது என்றால் இன்னும் விளக்கமேன் ?

இந்தப் பட்டியலைப் பார்த்தால் சுதந்திர தினத்திலே ஏன் மக்களிடையே உற்சாகம் பொங்கவில்லை என்ற கேள்விக்கு மறுமொழி கிடைக்கும். எனவே இந்த 'சாதனைகளை'ப் பற்றி சாகசம் செய்து மக்களிடம் மாய்மாலம் செய்து வரும் காமராஜர் கோஷ்டியுடன் சம்பூர்ண அரசியல் சமூக பொருளாதார விமோசனத்தைப் பெறுவதற்காகப் போராடி வரும் கம்யூனிஸ்ட் கட்சியும் சேர்ந்தால் அது மக்கள் கண்ணில் மண் தூவும் வேலையல்லவா?

கே. ஆர்.

## தமிழரசுக் கழகம் வெளியேறிய காரணம்

வெகுநாட்களாகவே, தமிழ்நாடு காங்கிரஸில் ஆதிக்கம் செலுத்தும் காமராஜர் கோஷ்டி தமிழரசுக் கழகம் ஒரு அரசியல் கட்சி என்று குற்றம் சாட்டி காங்கிரசிலிருந்து வெளியேற்ற முயன்று வந்தது. அது ஒரு தேசிய கலாச்சார அமைப்புத்தான், தமிழனின் தேசிய ஒற்றுமைக்கும் கலாச்சார உரிமைகளுக்கும் போராடும் ஸ்தாபனம்தான், இதற்கு அரசியல் நோக்கம் எதுவுமில்லை, எனவே காங்கிரசில் கட்சிக்குள் கட்சி கட்டுவதாகக் குற்றஞ் சாட்டுவது அநீதி என்று வாதாடினர் தமிழரசுக் கழகத்தார்.

தமிழரசுக் கழகத்தைச் சேர்ந்தவர்களை, கடைசியாக குடியாத்தம் தேர்தல் வரை ஒவ்வொரு தேர்தலிலும் நன்குஉபயோகித்து தனது கைகளைப் பலப்படுத்திக்கொண்டது காமராஜர் கோஷ்டி. முடிவில் தனது தலைமைக்கு எவ்வித ஆபத்தும் தமிழரசுக் கழகத் தலைவர்களிடமிருந்து ஏற்படாமலிருக்க அவர்களை காங்கிரசிலிருந்தேவெளியேற்றுவதில் வெற்றியும் கண்டது.

தமிழரசுக் கழகம் ஜூலை 4-ந் தேதி வடக்கெல்லைப் போராட்ட தினம் கொண்டாடும்போது அதில் திரு. கிராமணியார் போன்ற காங்கிரஸ் அங்கத்தினர்கள் பங்குகொள்ள கூடாதென காமராஜ் கோஷ்டி உத்தரவிட்டது. இதை மீறி எல்லைக் கமிஷன் தினம் கொண்டாடினர். இதற்காக 15 தினத்திற்குள் காரணம் கூறாவிட்டால் கிராமணியார் போன்றவர்களை வெளியேற்றுவதாக மிரட்டினர். ஆனால் கிராமணியாரும் தமிழரசுக் கழகத்திலிருந்த ஏனைய காங்கிரஸ்காரர்களும் தாங்களாகவே காங்கிரசிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டு வெளியேறி வருகின்றனர்.

இத்தனை சம்பவங்களையும் காமராஜர் கோஷ்டியின் சர்வாதிகார

(11-ம் பக்கம் பார்க்க)

# படுநாச வெள்ளப்பெருக்கு

## கிராமமே அழிந்தது-மக்கள் சர்வமும் இழந்தனர்

### உதவி கோரி கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

நுரைத்துப் பொங்கியெழும் நதிகள் கரைகளையெல்லாம் உடைத்துப் பிளந்து கண்டகண்ட திசை நோக்கிப் பாய்ந்து செல்கின்றன. எங்கு நோக்கினும் பெருவெள்ளம்; தண்ணீர்க்காடு. நூறுயிரக் கணக்கான ஏக்கர் நிலம் பாழ்பட்டுக் கிடக்கிறது. லட்சக்கணக்கான மக்கள் வீடு, வாசல், சொத்து, சுகம் அனைத்துமிழந்து தவித்துத் துடிக்கிறார்கள். ஏராளமான உயிர்ச்சேதமும் ஏற்பட்டிருக்கிறது.

வடக்கு பீஹார், அஸ்ஸாம், மேற்கு வங்காளத்தின் வடபகுதிகள், உத்தரப் பிரதேசத்தின் கிழக்கு ஜில்லாக்கள் முதலிய மிகப் பரந்த பிரதேசத்தைப் படுசேதத்திற்குள்ளாக்கிய இந்த வெள்ளக் கொடுமையைப்போல சமீப காலத்தில் வேறெங்குமே நடைபெற்றதில்லை.

பட்டாவிலே படுவதைப்போல சர்வமும் இழந்து உண்ண உணவின்றி, இலை, தழை, வேர்களைத் தின்று உயிர் ஜீவிக்கும் மக்களைத் தொத்து நோய்கள் பீடித்துள்ளன.

இமயமலையில் உற்பத்தியாகி தெற்குநோக்கிப் பீஹார் ராஜ்யத்தில் பாய்ந்துவரும் சிறிது, பெரிதான சுமார் 20 நதிகளிலும் வெள்ளம் பொங்கி கரைகளை உடைத்திருக்கிறது. வடபீஹாரில் வாழும் 70 லட்சம் மக்களும் இதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதற்கு முன் எந்த வெள்ளத்தினாலும் பாதிக்கப்படாத பகுதிகள் கூட இப்பொழுது தண்ணீரில் அமிழ்ந்து கிடக்கின்றன.

மிகவும் வளமான 12,000 சதுர மைல் பண்பட்ட நிலம் இன்று தண்ணீருக் கடியிலே பாழாகிக் கிடக்கிறது. இதனால் ஏற்பட்ட சேதத்தின் அளவை உள்ளத்தால் எண்ணிப்பார்க்கவும் முடியவில்லை.

#### கிராமங்கள் மறைந்தன

பல கிராமங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. தர்பங்காவில் மட்டும் 30,000 வீடுகள் இடிந்து விழுந்து விட்டன. சம்பாரன் ஜில்லாவின் நான்கு பிர்க்காக்களில் மட்டும் 20,000 வீடுகள் நாசமாகி விட்டன. போக்கு வரவு பூராவும் தடைப்பட்டது. 460 மைல் நீள ரயில் பாதையும் சேதமாகிக்கிடக்கிறது.

விவசாய மக்களின் சாகுபடி அனைத்தும் நாசமாகிப் போனதால், பல கோடிக் கணக்கான ரூபாய்கள் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. வெள்ளத்தைத் தொடர்ந்து காலரா, அம்மை, மலேரியா முதலிய கொடும் நோய்கள் உயிர்பலி கொள்ளத் தொடங்கி விட்டன.

'பீஹாரின் துக்கம்' என்று அழைக்கப்படும் கோசி நதியினால் தான் மிகப்பெரும் சேதம் ஏற்பட்டிருக்கிறது. இந்தப் பெரும் நதி அடிக்கடி தன் போக்கை மாற்றிக் கொள்ளுகிறது. இந்தத் தடவையும் 16 மைல் தூரம் விலகி புதிய பிரதேசத்தின் வழியாக நதி ஓடத் தொடங்கி யிருக்கிறது. இதனால் கணக்குவழக்கற்ற உயிர்ச்சேதமும், பொருட்சேதமும் ஏற்பட்டுள்ளன. ஆனால் இதுவரையிலும் இந்த நதியைக் கட்டுப்படுத்த எத்தகைய முயற்சியும் செய்யப்படவில்லை. கோசி நதி அணைக் கட்டுத் திட்டம் இன்னும் காகித அளவில்தான் இருந்துவருகிறது.

மிகவும் துரிதமாக இந்த அணைக் கட்டு திட்டத்தை முடிக்கமுடியாது என்பதல்ல. சீனாவில் பெரும் சேதம் விளைவித்துவந்த ஹூவாய் நதியில் சீன சர்க்கார் மிகக் குறுகிய காலத்தில் அணைக் கட்டு கட்டிமுடிக்கவில்லையா? லட்சக்கணக்கான விவசாய மக்களைத் திரட்டி உற்சாகமுடன் பணியில் இறங்கினால் நிச்சயம் கோசி நதியையும் கட்டுப்படுத்தி நீர்ப்பாசன வேலைகளுக்குப் பயன்படுத்த முடியும்.

#### அஸ்ஸாம் - வங்காளம்

பீஹாரைப்போலவே அஸ்ஸாமும் பெரும் வெள்ளத்திற்கு இரையாகியிருக்கிறது. 200 மைல் நீள அஸ்ஸாம் ரயில்வேப் பாதை சேதமாகிக் கிடக்கிறது. இந்தியாவின் இதர பகுதிகளிலிருந்து அஸ்ஸாம் ராஜ்யம் வெள்ளப்பெருக்கினால் தனியாகத் துண்டிக்கப்பட்டது.

பிரம்மபுத்திராவும், அதன் உப நதிகளும் கரைகளை உடைத்துக் கொண்டு பெருஞ்சேதம் விளைவித்துள்ளன. ஐந்து லட்சம் மக்கள் இதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

இதேபோல மேற்கு வங்காளத்தின் வடக்கு ஜில்லாக்களிலும், உத்தரப்பிரதேசத்தின் கிழக்கு ஜில்லாக்களிலும் நாடு நகரெங்கும் சின்னஞ்சிறு கடல்களாகக் காட்சியளிக்கின்றன.

மேற்கு வங்காளத்தில் 400 சதுர மைல் பிரதேசம் தண்ணீருக்கடியில் அமிழ்ந்து கிடக்கிறது. சுமார் 200 சதுர மைல் விஸ்தீர்ணமுள்ள செழிப்பான பண்ணை நிலம் பூராவும் மணல் மேடிட்டு சாகுபடிக்கே சற்றும் லாயக்கற்றதாக ஆக்கப்பட்டுள்ளது.

#### கம்யூனிஸ்ட் கட்சியின் அறைகூவல்

இவ்விதம் சர்வ நாச வெள்ளக் கொடுமையில் சிக்கித் தவிக்கும் நூறுயிரக்கணக்கான மக்களுக்கு உடனடியாக சகல நிவாரண உதவிகளும் அளிக்க இந்திய மக்கள் அனைவரும் துரிதமாக முன்வர வேண்டுமெனக் கோரி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட் பீரோ அறைகூவல் விடுத்துள்ளது.

கட்சி விடுத்த அறிக்கை பின்வருமாறு :—

உத்திரப் பிரதேசத்திலிருந்து அஸ்ஸாம் வரையிலும் நீண்டு கிடக்கும் பரந்த பிரதேசத்தில் வசிக்கும் பல லட்சக் கணக்கான மக்கள் பேரவதிக்குள்ளாகி தவிக்கிறார்கள். பயங்கரமான வெள்ளத்தால் இப் பிரதேசம் பூராவும் நாசமாகிக் கிடக்கிறது. வீடு வாசல், சொத்து சுகம் அனைத்தும் இழந்து ஆயிரம் ஆயிரம் ஆண், பெண், குழந்தைகள் பரதவித்து நிற்கிறார்கள். சாகுபடி யெல்லாம் நாசமாகி விட்டது. போக்கு வரவும் தடைப்பட்டு நின்று போயிற்று.

சர்வநாசப் பேரழிவு ஏற்பட்டிருக்கும் இந்த சமயத்தில், சகல கட்சிகள், ஸ்தாபனங்களுடன் ஒத்துழைத்து, உடனடியாக அத்தியாவசியமான நிவாரண வேலைகளைச் செய்ய முன்வரும்படி தன் சகல உறுப்பினர்களையும், நண்பர்களையும் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கிறது. மக்களுக்கு நிவாரணமளிக்கும் இந்தக் கடமையை, திறமையற்ற அதிகார வர்க்கத்தினரின் கைகளில் மாத்திரம் விட்டு வைப்பது பெருந்தவறாகும். இந்த அவசரமான நிவாரண வேலைகளைச் செய்ய ஸ்தாபன ரீதியாகப் பொது மக்களே உடனடியாக முன்வர வேண்டும். இந்த அதி அவசரமான வேலையில் மக்களின் ஒத்துழைப்பை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது சர்க்காரின் கடமையாகும்.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருக்கும் மக்களுக்கு உதவியாக நாடெங்குமுள்ள பொதுமக்கள் பணமாகவோ, பண்டமாகவோ கொடுத்துதவ வேண்டும். பாதிக்கப்பட்ட மக்களுடன் இந்திய மக்கள் அனைவருமே தங்கள் ஒருமைப்பாட்டைத் தெரிவித்துக்கொள்ள இதுவே சாலச் சிறந்த வழி. நிவாரணமளிக்க வேண்டியது தேசியப் பொறுப்பாகக் கருதப்பட வேண்டும். அவதிப்படும் லட்சக் கணக்கான மக்களுக்கு மனப்பூர்வமாகத் தொண்டாற்ற கம்யூனிஸ்ட் கட்சி தன்சபதமேற்கிறது.




## நிலச் சீர்திருத்தம் பசி போக்குமா?

கே. குப்புசாமி, வேலாயுதம் பாளையம்.

**கேள்வி:** நிலச்சீர்திருத்தம் கோரும் கம்யூனிஸ்டுகள், நம்நாட்டிலுள்ள ஏழைகள் குறையை நில வினியோகத்தின் மூலம் நீக்கிவிட முடியும் என்று கருதுகிறார்களா? எல்லோருக்கும் வினியோகம் செய்ய நிலம் நம் நாட்டில் இருக்கிறதா?

**பதில்:** தமிழகத்தின் ஜனத்தொகை சுமார் 3 கோடி. இந்த மூன்று கோடி தமிழர்களுக்கும் நிலம் கிடைக்க வேண்டும் என்று கம்யூனிஸ்டு கட்சி சொல்லவில்லை. ஆபீஸ்களில் வேலைசெய்பவர்கள், தொழில்சாலைகளில் வேலை செய்வர், நகரப்புறங்களில் ஏதாவது ஒரு வேலையில் ஈடுபட்டிருப்பவர்கள் போன்ற நிலத்தில் நேரடியாக உழைக்காதவர்களுக் கெல்லாம் நில வினியோகம் செய்ய வேண்டும் என்று கம்யூனிஸ்டுக் கட்சி கூறவில்லை.

தமிழகத்தில் 12 ஜில்லாக்களில் இன்று சாகுபடியிலுள்ள நிலம் 1 கோடியே 80 லட்சம் ஏக்கர். இன்னும் சாகுபடிக்கு லாயக்கான தரிசு 40 லட்சம் ஏக்கர்தான். இதை 3 கோடி மக்களிடையே பங்கிட வேண்டுமென்று கண்ணை மூடிக் கொண்டு நாம் பேச வில்லை, எழுதவுமில்லை.

மாறாக மூன்று கோடி தமிழர்களில் 80 சதவிகிதம் மக்கள் கிராமப்புறத்தில் வசிப்பவர். இவர்களில் சுமார் 47 சதவிகிதம் விவசாயிகளுக்கு நிலமே இல்லை. மேலும் ஒரு கணிசமான பகுதி விவசாயிகள் மிகமிகக் குறைவான பற்றாக்குறை நிலமுள்ளவர். அதே சமயத்தில் 12 ஆயிரம் ஏக்கருள்ள வடபாதிமங்கலம் தியாகராஜ முதலியார், 2 ஆயிரம் ஏக்கருள்ள குன்னியூர் அய்யர் போன்ற ஒரு சிலரிடம் ஏராளமான நிலம் குவிந்திருக்கிறது. உதாரணமாக சுமார் $6\frac{1}{2}$ சதவிகிதம் பட்டாதார்களுக்கு தமிழ் நாட்டில் மொத்தம் சாகுபடியிலுள்ள ரயத்துவாரி நிலத்தில் $31\frac{1}{2}$ சதவிகிதம் நிலம் சொந்தமாக உள்ளது! இவர்கள் பெரும்பாலும் நிலத்தில் இறங்கி பாடுபடாத நபர்களே!

இவ்வித அநீதமான முறை ஒழியவேண்டும். பாடுபடுபவனுக்கு நிலம் சொந்தமாக வேண்டும். நில உடமைக்கு ஒரு எல்லை வகுத்து அந்த எல்லைக்கு மேலுள்ள நிலத்தையும் தரிசு நிலத்தையும் நிலமில்லாதவர்களுக்கும் ஏழை விவசாயிகளுக்கும் பிரித்துக்கொடுக்க வேண்டும்என்றுதான் கம்யூனிஸ்டு கட்சிக் கூறுகிறது.

இவ்விதம் பிரித்துக்கொடுத்தும் கூட ஒருபகுதி விவசாயிகளுக்கு நிலமில்லாது போகலாம். புதிய புதிய தொழிற்சாலைகளை ஏற்படுத்துதவன்மூலம் அவர்களுக்குவேலை கிடைக்கச் செய்யலாம்.

நிலவினியோகத்தின் மூலம் இன்று வருமானமில்லாத பெரும் பகுதி விவசாயிகளிடம் வருமானம் வர வாய்ப்பு ஏற்படும். அதனால் இங்கு புதுப்புது தொழில்சாலைகள் ஏற்படுத்தி வசதி ஏற்படும். இவ்வித புதிய தொழிற்சாலைகளில், கிராமப்புறத்தில் நில வினியோகத்தால் பயனடையாதவர்களுக்கு வேலை கிடைக்கும், என்று கம்யூனிஸ்டுக் கட்சி கூறுகிறது.

தமிழ்நாட்டின் 'ஏழைகள் குறையை' வறுமையைப் போக்கும் வழி இது வல்லாது வேறு ஏதாவது மாற்று மருந்து உங்களிடமுண்டா? இதற்கு உங்கள் பதில் என்ன?

### திண்டாட்டம்

**கேள்வி:** குடியாத்தம் தேர்தலில் இதுவரை தி. க., தி. மு. க. வினர் தாங்கள் எதிர்த்துவந்த காங்கிரசை அப்பட்டமாக ஆதரிக்க முன்வந்த காரணமென்ன என்று ராஜபாளையம் கே. தட்சிணாமூர்த்தி' நாமக்கல் என். எஸ். பழனியப்பன், கலப்பம்பாடி வெஙகட்ராமன், தேனீ எம் யூ. மஸ்தான் ஆகியோர் கேட்கின்றனர்.

**பதில்:** இந்தக் கேள்விக்கு பல தடவை பதில் கூறிவிட்டோம். காமராஜர் வெற்றியைப்பற்றி 'விடுதலை' 'திராவிடன்' போன்ற ஏடுகள் தீட்டிய தலையங்கங்கள் நமது கூற்றை மெய்ப்பித்துள்ளன. கடைந்தெடுத்த வகுப்புவாதப் பித்து அவர்களை காமராஜருக்கு பஜனை பாடவைத்தது. இதை அவர்களே ஒப்புக்கொள்கின்றனர். சமதர்மம், பொதுவுடமை என்று அவர்கள் பேசி வந்ததெல்லாம் வெறும் வெத்துவேட்டு என்பதும் அப்பட்டமாயிற்று. ஜாதீயக் கண்கொண்டு பார்ப்பதனாலேயே ஒரு முற்போக்குக் கொள்கை, ஸ்திரமான கொள்கை இல்லாது திண்டாடுகின்றனர்.

### திடீர் பல்டிகளின் காரணம்

**கேள்வி:** அ. மு. ஷரீப்; முத்துப்பேட்டை, சந்தேகி திண்டுக்கல்.

தென்றல், திராவிடன்போன்ற திமுக ஏடுகள் சோவியத் யூனியனையும், நசீனத்தையும் தொடர்ந்து தூற்றுகின்றன. "நம்நாடு" இதழ் நேரு-சௌ கூட்டறிக்கையால் காதொடிந்த ஊசி அளவு கூட நமக்கு நன்மையில்லை என்று எழுதியது. இன்று அந்த ஒப்பந்ததைப் போற்றுகிறது. இவ்விதம் இவர்கள் திடீர், திடீர் என்று அரசியல் பல்டிகள் அடிப்பதற்குக் காரணமென்ன?

**பதில்:** இதற்கு முந்திய கேள்விக்குக் கொடுத்த பதில்தான் இதற்கும். பாட்டாளி வர்க்க சர்வதேச ஒற்றுமை, பல்வேறு தேசிய இன ஒற்றுமை போன்ற முற்போக்குக் கொள்கையின் எதிரிகள் இந்த ஏடுகள். ஒரு இனம் மற்றொரு இனத்தை வெறுப்பது, ஒரு ஜாதி, மற்றொரு ஜாதியை வெறுப்பது இதுவே இவர்களது நிரந்தரக் கொள்கை. இக்காரணத்தினாலேயே திடீர் திடீரென்று மாறுகிறார்கள்.

### மித்திரபேதம் நடக்காது!

**கேள்வி:** ச. வடிவேலன், மோகனூர், கே. சிவலிங்கம், திருவெறும்பூர், கே. பி. சாமிவேல், திண்டுக்கல்.

தேவிகுளம், பீர்மேடு தமிழ்நாட்டைச் சேர்ந்ததென்று தோழர் ஜீவாவும், அவை மலையாளிகளைச் சேர்ந்தவை என்று தோழர் ஏ. கே. கோபாலனும் பேசினதாக ஒரு திமுக ஏடு 'தனி அரசு' எழுதுகிறதே. இது உண்மையா?

**பதில்:** உண்மையல்ல. கம்யூனிஸ்ட் கட்சியின் கேரளக் கமிட்டிக்கும், தமிழகக் கமிட்டிக்கும் திருதமிழகம் தமிழ் நாட்டுடன் இணைவதுபற்றி ஒரே அபிப்பிராயந்தானுள்ளது' தமிழகத்தை ஒட்டியுள்ள திருகொச்சியில் தமிழர்கள் பெருவாரியாக வாழும் பிரதேசம் தமிழகத்துடனும், மலபார் ஜில்லா திரு – கொச்சியுடனும் சேர்ந்து ஐக்கிய தமிழகம் ஐக்கிய கேரளம் அமைய வேண்டுமென்பதே இரு கமிட்டிகளும் நடத்தும் போராட்டங்களின் நோக்கம். தகராறுக்குரிய பகுதிகளை கிராமவாரியாக பொதுஜன வாக்கெடுப்பின் மூலம் தீர்த்துக்கொள்ளலாம் என்பதே இருவரின் முடிவு.

தோழர்கள் ஜீவா, ஏ கே. கோபாலன் மட்டுமல்ல, கம்யூனிஸ்டுக் கட்சியின் கிளை எங்கிருந்தாலும் அதன் ஒவ்வொரு அங்கத்தினரும் இதே கொள்கைக்காகத் தான் போராடி வருகிறார்கள். இதுதான் நிலமை. தனி அரசு போன்ற பத்திரிகைகள் இருவருக்கும் பேதம் கற்பிக்க பொய்ப் பிரசாரம் செய்வது கல்லில் நார் உரிக்கும் முயற்சி என்று தெரிந்து கொள்ளட்டும். —கே. எம்.

# நெய்வேலியில் பழிவாங்கல்

## மந்திரி பக்தவத்சலம் கவனிப்பாரா?

சர்க்காரின் ஆதீனத்தில் இருக்கும் நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்துவரும் தொழிலாளர்கள் சட்டபூர்வமாகத் தமக்கென்று ஒரு தொழிற் சங்கத்தை நிறுவி நடத்தி வருகிறார்கள். சங்கம் தொழிலாளர் குறைகள் தீரவும், கோரிக்கைகள் பெறவும். நிர்வாகத்தின் அட்டூழியங்களை எதிர்த்தும் போராடி வருகிறது தொழிலாளரிடையே லேபர் யூனியன் சங்கத்திற்கு செல்வாக்கு அதிகரித்து வருகிறது.

இதைக்கண்டு ஆத்திரமடைந்த நிர்வாகம் சங்க நிர்வாகிகள் உட்பட 15 தொழிலாளர்களைப் பழிவாங்கும் முறையில் வேலையை விட்டு விலக்கியிருக்கிறது. குற்றப்படுத்தி போலீசை தலையிட வைக்கிறது. இதை ஆட்சேபித்தும், உடனடி விலக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு வேலைகொடுக்க வேண்டுமென்றும் வேறு பல கோரிக்கைகளை முன்வைத்தும் ஒரு மகஜரை இச்சங்கத்தின் சார்பில் சென்னை முதல் மந்திரிக்கும், தொழில் மந்திரிக்கும் அனுப்பி வைத்திருக்கிறார்கள்.

அக் கோரிக்கைகளாவன: (1) சங்கத்தை அங்கீகரிக்கவேண்டும் (2) குறைந்தபட்ச கூலி ரூ 2, தவிர பஞ்சப்படி (3) நிரந்தரமான வேலை வேலைக்குப் பாதுகாப்பு (4) வேலைத் திறமைக்குத் தகுந்தபடி கிரேடுகள் (5) சர்க்கார் ஊழியர்களுக்கு அளிக்கப்படும் லீவு வசதிகள் (6) வீட்டு வசதி, இலவச வைத்திய வசதி.

பண்டித நேருவுடன் நெய்வேலிக்குத் தொழில் மந்திரி பக்தவத்சலம் சென்றிருந்தபோது நியாயமான தொழிற்சங்க உரிமை அளிக்கப்படுமென்றும், தொழிற் சங்க வேலைகளுக்காகப் பழிவாங்குதல் நடக்காதென்றும் உறுதி கூறியிருந்தார். சட்டசபையிலும் பல முறை இது பற்றி பிரச்சினை கள் கிளப்பப்பட்டபோது இந்த உத்தரவாதத்தையே ஊர்ஜிதம் செய்தார். இன்று நெய்வேலியிலுள்ள நிலைமையை மந்திரி பக்தவத்சலம் கவனிப்பாரா? பெரும்

(11-ம் பக்கம் பார்க்க)

## குவாடிமாலா மாதர்தலைவி சித்ரவதை

### தமிழ்நாட்டுப் பெண்களே கண்டிக்க வாரீர்!

தமிழ்நாட்டுத் தாய்மார்களே! சகோதரிகளே! குவாடிமாலா தேசத்தை அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் குண்டர்கள் படையெடுத்துக் கைப்பற்றிக் கொண்ட பிறகு, அந்த நாட்டின் பெண்கள் சங்கத் தலைவியாக இருந்த திருமதி. ஹெய்டிகோடேயை சித்ரவதை செய்து கொலை செய்து விட்டார்கள். கொடிய மிருகங்களும்கூட செய்யத் துணியாத இந்த மிலேச்சத்தனத்தை நாம் ஒருக்காலும் சகிக்க முடியாது. இந்த அக்ரமத்தை வன்மையாகக் கண்டிக்க ஆயிரமாயிரம் பெண்களும் அவர்களது சங்கங்களும் ஆர்த்தெழ வேண்டியது தாய்க்குலத்தின் தலைசிறந்த பணியாகும் என்று 9-8-54-ல் மதுரை நகர் பெண்கள் சங்க அங்கத்தினர் கூட்டம் நடைபெற்றபோது, ஓர் வேண்டுகோள் விட்டார்கள். மதுரை ஜில்லா முழுவதும் ஆயிரக் கணக்கான கார்டுகளில் கீழ்க்கண்ட வாசகங்களை ஆங்கிலத்தில் அச்சடித்து ஐக்கிய நாடுகள் சபை தலைவி திருமதி. விஜயலட்சுமிக்கு அனுப்பி வருகிறார்கள். அக்கார்டுகளில் ஏராளமான பெண்கள் கையெழுத்திட்டு வருகிறார்கள். இது மாதிரியே கார்டுகளில் அச்சிட்டு கையெழுத்துக்கள் வாங்கி அனுப்புமாறு மதுரைநகர் பெண்கள் சங்க காரியதரிசி கே. பி. ஜானகியம்மாள் கேட்டுக் கொள்கிறார்.

### கண்டனக் கடிதம்

ஸ்ரீமதி. விஜயலட்சுமி
C/O. பண்டிட் ஜவஹர்லால் நேரு,
இந்திய பிரதம மந்திரி,
புது டில்லி.

அன்புள்ள விஜயலட்சுமி பண்டிட்,

குவாடிமாலா பெண்கள் சங்கத் தலைவி திருமதி. ஹெய்டே கோடே கொலை செய்யப்பட்டதைக் கண்டு நாங்கள் அதிர்ச்சியுற்றோம். சாதாரண மக்களை ஈவிரக்கமற்ற முறையில் கொலை செய்கிறார்கள் என்பதற்கு இது மற்றோர் அத்தாட்சியாகும்.

தாங்கள் ஒரு பெண் என்ற முறையிலும் ஐக்கிய நாடு சபையின் தலைவர் என்ற முறையிலும் கேட்டுக்கொள்ளுகிறோம். பெண்களையும் குழந்தைகளையும் கொலை செய்து வருவதை தாங்கள் தலையிட்டுக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்.

கையெழுத்து........

## தயாராகிறார்கள்

ஜில்லா போர்டு தேர்தல்கள் நெருங்கிவிட்டன. சகல ஜில்லாக்களிலும் கம்யூனிஸ்ட் கட்சி தன் அபேட்சகர்களை நிறுத்தி யிருக்கிறது. ஜில்லா போர்டு அங்கத்தினர் பதவியைப் பயன்படுத்திக் கொண்டு, மக்களின் வரிப்பணத்தைக் கொள்ளையடிக்கவும், லஞ்சம் வாங்கவும், தங்களைச் சார்ந்தவர்கள் சொத்துச் சேர்த்துக் கொள்ளுவதற்கும் ஆனதொரு குகையாக இதுவரை உபயோகப் படுத்தி வந்தவர்களெல்லாம் கம்யூனிஸ்டுகளைக் கண்டு ஆத்திரப் படுகிறார்கள்; பயப்படுகிறார்கள்; காரணம் கொள்ளையடிப்பதையும் நிர்வாக ஊழலையும் கம்யூனிஸ்டுகள் கடுமையாக எதிர்ப்பார்கள்; கிராமம் கிராமமாக அம்பலப் படுத்துவார்கள்!

ஜில்லா போர்டுகளின் அதிகார வரம்பு குறுகியதாயிருந்தபோதிலும்கூட, அதனால் கிடைக்கும் சிறு நன்மைகளையும் சிதறவிடாமல், அனைத்தும் மக்களுக்கே கிடைக்க கம்யூனிஸ்ட்கள் ஜில்லா போர்டுகளில் உறுதியுடன்,விடாப்பிடியாகப் போராடுவார்கள். எனவே அவர்களைப் பெருவாரியாகத் தேர்ந்தெடுக்கவும், பணமூட்டைகளை முறியடிக்கவும் இப்பொழுதே தீவிர தயாரிப்புகளில் இறங்க ஒவ்வொரு ஜில்லாவும் முன் வருகிறது.

சென்ற வாரம் திருநெல்வேலி ஜில்லா அபேட்சகர்களின் பெயர்களை தோழர் ஆர். வி. அனந்த கிருஷ்ணன் அனுப்பியிருந்தார். அவற்றை ஜனசக்தியில் வெளியிட்டோம். இந்த இதழில், இதோ, ராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு தேர்தலில் நிற்கும் நமது கட்சி அபேட்சகர்களின் பெயர்களையும், நமது கட்சியின் ஆதரவைப் பெற்றவர்களின் பெயர்களையும் தோழர் ஆர். எச். நாதன் அனுப்பியிருக்கிறார். அதுபோல் கோவை ஜில்லா அபேட்சகர்களின் பெயர்களை தோழர் பி. கே. ராமசாமி அனுப்பியிருக்கிறார்.

### ராமநாதபுரம்
## ஜில்லா போர்டு தேர்தலுக்கு
### கம்யூனிஸ்ட் கட்சி அபேட்சகர்கள்

#### ஸ்ரீவில்லிப்புத்தூர் தாலுகா

| | | |
|---|---|---|
| 1. | எஸ். அழகர்சாமி | வத்திராயிருப்பு |
| 2. | ஏ. மாடசாமி | சோளபுரம் |
| 3. | செல்லம் பிள்ளை | ராஜபாளையம் (பொது) |

#### சாத்தூர் தாலுகா

| | | |
|---|---|---|
| 4. | கே. வி. ராமசாமி | சிவகாசி |
| 5. | கே. வி. சீனிவாசன் | விருதுநகர் |

#### அருப்புக்கோட்டைத் தாலுகா

| | | |
|---|---|---|
| 6. | எஸ். ராமானுஜம் | அருப்புக்கோட்டை |
| 7. | முத்துக்குமாரசாமி | திருச்சுழி |

#### சிவகங்கைத் தாலுகா

| | | |
|---|---|---|
| 8. | வி. ஐயாச்சாமி | மானாமதுரை |

#### பரமக்குடி தாலுகா

| | | |
|---|---|---|
| 9. | எஸ். பொன்னுச்சாமி | பரமக்குடி |
| 10. | எம். விஸ்வநாதன் | போகளூர் |

#### திருப்பத்தூர் தாலுகா

| | | |
|---|---|---|
| 11. | எஸ். நாராயணன் | குன்னக்குடி |
| 12. | எஸ். கிருஷ்ணன் | கல்லல் |
| 13. | வி. வீரபத்திரன் | திருப்பத்தூர் (பொது) |
| 14. | ஏகாதசி அம்மாள் | திருப்பத்தூர் (ரிசர்வ்) |
| 15. | வெல்லடைக்காரர் (பாரிதாசன்) | சதுர்வேதமங்கலம் |

### கட்சி ஆதரிக்கும் அபேட்சகர்கள்

| | | |
|---|---|---|
| 1, | ராமதாஸ் | சதுர்வேதமங்கலம் (திருப்பத்தூர்-ரிசர்வ்) |
| 2. | கடற்கரை | ராஜபாளையம் (ரிசர்வ்) |

## கோவை ஜில்லா

இங்கு 18 ஸ்தானங்களுக்கு கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிடுகிறது 5 இடங்களில் சுயேச்சை அபேட்சகர்களை ஆதரிக்கிறது.

| | | |
|---|---|---|
| 1. | எஸ். எம். மாரப்பன் | சத்தியமங்கலம் |
| 2. | கே. என். சின்னையன் | சாமக்குளம், கோவில் பாளையம். |
| 3 | கே. ஆர். ராமசாமி | மதுக்கரை |
| 4. | என். கருப்பண்ணன் | திருப்பூர் |
| 5. | எஸ். டி. ஷண்முகம் | சூலூர் பொதுத்தொகுதி |
| 6. | சி. ராமசாமி | பல்லடம் |
| 7. | எம். ஜோதிநாத் | பெருந்துறை |
| 8. | கே. எஸ். நாச்சிமுத்து | ஈரோடு |
| 9. | என். வி. நாகசாமி நாயுடு | கோவில்பாளையம் |
| 10. | ஐ. மகமது உசேன் | பொள்ளாச்சி |
| 11. | எஸ். திருமலைசாமி | ஆனமலை |
| 12. | சி. மதுரம் | வால்ப்பாறை |
| 13. | ரங்கப்பக் கவுண்டர் | கோலார்பட்டி |
| 14. | ஜி. தாமோதரன் | குடிமங்கலம் |
| 15. | என். சாமு | உடுமலை பெரியவாளவாடி |
| 16. | கே. ராமகிருஷ்ணன் | மடத்துக்குளம் |
| 17. | எஸ். ராமலிங்கம் | கோவை (ரிசர்வ்) |
| 18. | ஐ. எம். ஷெரீப் | அவனாசி |

### கட்சியின் ஆதரவு பெற்றவர்கள்

| | | |
|---|---|---|
| 1. | டி. எம். பெருமாள் | கோவை, பொதுத்தொகுதி |
| 2. | பழனிச்சாமிக் கவுண்டர் | மொடக்குறிச்சி |
| 3. | ஜி. அப்பாசாமி | கிணத்துக்கடவு |
| 4. | கே. ஸி. சுப்பையா | சென்னிமலை |
| 5. | ராஜகோபால் (மேட்டுப்பாளையம்) | குறமுகை |

### சட்டசபை கேள்வி நேரத்தில்:

## ஐக்கிய தமிழக எதிரிகள் அம்பலம்!

ஆகஸ்டு மாத முதல் வாரத்தில் நடந்த சட்ட சபையில் பல முக்கிய கேள்விகள் விவாதத்திற்கு வந்தன. சர்க்காரின் கொள்கையும் எதிர் கட்சிகளின் போக்குகளும் தெளிவாயின.

திரு-தமிழகத்தை தமிழகத்துடன் சேர்க்கும் போராட்டத்திற்கு ஆதரவு கொடுக்க வேண்டும், அதைப் பற்றி விவாதிக்க வேண்டும் என்று கம்யூனிஸ்டு கட்சியின் சார்பில் தோழர் ஜீவா ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். இதைச் சட்ட சபையில் விவாதிக்க அனுமதிக்கவே சர்க்கார் மறுத்தது. மற்றொரு ராஜ்யத்தின் உள் விவகாரங்களில் சென்னை சட்ட சபை தலையிடக் கூடாது என்பது கனம் சுப்பிரமண்யத்தின் விவாதம். இலங்கை இந்தியர் பிரச்னையை நாம் விவாதிக்கலாம்! ஆனால் இந்திய யூனியனிலேயே தமிழகத்தை ஒட்டியுள்ள தமிழ் பகுதியிலுள்ள தமிழர் பிரச்னையை விவாதிக்கக் கூடாதென்பது அர்த்தமற்றது. நேரு சர்க்காரின் மொழிவழி ராஜ்ய எதிர்ப்புக் கொள்கையை தமிழ் நாடு காங்கிரஸ் பின்பற்றுவதின் விளைவே இந்த எதிர்ப்பிற்கு காரணமென்பதை தோழர்கள் பி. ராமமூர்த்தியும், ஜீவாவும் அம்பலப்படுத்தினர்.

### சட்டசபையிலிருந்து வெளியேறினர்

திரு-தமிழக மக்களை உதாசீனப்படுத்தும் சென்னை சர்க்காரின் போக்கைக் கண்டிக்கும் முறையில் சட்ட சபையிலிருந்து வெளியேறுவதாக தெரிவித்து விட்டு, கம்யூனிஸ்டுக் கட்சி எம். எல். ஏ.க்களும், முற்போக்கு சுயேச்சை எம். எல். ஏ.க்களும் வெளியேறினர். மலையாளக் கம்யூனிஸ்டு எம். எல். ஏ.க்களும் வெளியேறினர். தமிழர் உரிமைக்காக மலையாளிகள் அனுதாபம் தெரிவிக்கும் காட்சியை அன்று சட்ட சபையில் கண்டோம்! இன பேதம் பாராது மக்களின் உரிமைக்காகப் போராடுவது கம்யூனிஸ்டுக் கட்சி தான் என்பது தெளிவாகியது.

### யோக்கியதை அம்பலம்

ஆனால் டாக்டர் கே.பி.மேனனை தலைவராகக் கொண்ட பிரஜா சோஷியலிஸ்டு கட்சி பட்டம் தாணு சர்க்காரின் அடக்குமுறையை அங்கீகரிப்பவர்களல்லவா? அதனால் அன்று அவர்கள் வெளியேறவில்லை. அகண்ட திராவிடத்தில் பட்டம் தாணுப் பிள்ளை ஆட்சியும் ஒன்றாகையால், திராவிடக் கட்சியினரும் வெளியேறவில்லை! காங்கிரஸின் ராமபாணத்தால் உழைப்பாளர் கட்சி கட்டுண்டு கிடப்பதால் அவர்களும் ஐக்கிய தமிழகத்திற்காக அனுதாபம் தெரிவிக்க முடியவில்லை. இவ்வனம் ஆளும் கட்சியின் யோக்கியதையும் ஏனைய கட்சிகளின் உண்மை சொரூபங்களும் சட்ட சபையிலே அம்பலமாயின.

மீண்டும் ஆகஸ்டு 13ல் தோழர் எம். கல்யாணசுந்தரம் திரு-தமிழகத்தில் கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கும் கொடூர அடக்குமுறை பற்றி கேள்வி கேட்டார். இது பற்றி மத்திய சர்க்கார் நடவடிக்கை எடுக்கக் கோரி சென்னை சர்க்கார் முன்வர வேண்டுமென்றார். ஆனால் நிதிமந்திரி சுப்பிரமண்யம் அத்தகைய நடவடிக்கை எதுவும் எடுக்க முடியாதென்று பதிலளித்து காமராஜர் ஆட்சியின் தமிழர் விரோதக் கொள்கையை தெளிவாக்கினர்.

### மந்திரிகளுக்கு ஒரு நீதி ஊழியருக்கு வேறு நீதி

சொந்தப் பங்களாக்களில் வசிக்கும் மந்திரிகள் பக்தவத்சலம் போன்றோர் வீட்டு அலவன்ஸ் என்று ரூ. 250 வாங்கி வரும் செய்தி கேள்வி நேரத்தில் கிடைத்த ஒரு பதிலிலிருந்து தெரிந்தது. சாதாரணமாக சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் பலர் வாடகை வாங்கவேண்டுமானால் வாடகைப் பணத்தை முதலில் கொடுத்துவிட்டு ரசீது வாங்கிய பிறகு சர்க்கார் காரியாலயத்தில் கொடுத்து, பல நாட்கள் சர்க்காரிடம் காவடி எடுத்து பணம்வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால் மந்திரி பக்தவத்சலம் போன்றவர் தங்கள் சொந்த மாளிகையிலேயே வசித்துக் கொண்டு சுலபமாக வீட்டு அலவன்சும் வாங்கிக்கொள்வது முற்றிலும் நியாயமானதே என்று வக்காலத்து வாங்கிப் பேசினார் மந்திரி சுப்ரமண்யம்.

### பிரிட்டிஷ் முதலாளிகளுக்கு விதிவிலக்கு!

புகளூர் சர்க்கரை ஆலையிலிருந்து அனியாயமாக நீக்கப்பட்ட 50 தொழிலாளர்களுக்கு நீதி வழங்க, அப்பிரச்னையை விசாரணைசெய்ய, தொழில் கோர்ட்டிற்கு விடுவீர்களா என்று தோழர் கல்யாணசுந்தரம் கேட்டார்.மந்திரி பக்தவத்சலம் இக் கோரிக்கையை ஏற்க மறுத்தார். இதன் மூலம் பிரிட்டிஷ் முதலாளிகளுடன் தகராறு என்றால் மந்திரி பக்தவத்சலம் எவ்வளவு உஷாராக இருக்கிறார் என்பது தெளிவாயிற்று. பாரி கம்பெனி, பக்கிங்ஹாம் மில், போன்ற பிரிட்டிஷ் முதலாளிகள் நம் நாட்டில் நடத்தும் தொழிற்சாலைகளில் புரியும் அட்டகாசங்களை, நம் நாட்டுச் சட்டங்களை உபயோகித்து தடுக்க காமராஜர் தயாராக இல்லை என்பதும் தெளிவாயிற்று. காரணம் கொள்ளைக்கார காமன்வெல்த்தின் மேல் காங்கிரஸ் ஆட்சி கொண்டுள்ள பிணைப்பு, பாசம்.

—ந. நி.

# தொழில் அப்பீல் கோர்ட்டிலே

## மத்திய சர்க்காரின் போக்கு

### தொழிலாளர் நிலை என்ன?

1. இதற்கு முந்திய கட்டுரையில் பஞ்சாலை தீர்ப்பைப் பற்றி குறிப்பிட்டிருந்தேன். சில எண்கள் தவறுதலாக பிரசுரிக்கப்பட்டிருப்பதால் அதை முதலில் எழுதுகிறேன். ஸ்பெஷல் கோர்ட் தீர்ப்பின்படி 74 மில்கள் தீர்ப்பை அமுல் நடத்தின. 38 மில்கள் அப்பீல் செய்தன. (6 மில்கள் என தவறுதலாக பிரசுரிக்கப்பட்டிருந்தது.) 6 மில்கள் அப்பீல் செய்யவுமில்லை, நஷ்டஈடு கொடுக்கவுமில்லை. அப்பீல் செய்த 38 மில்களில் 35 மில்களே ஸ்டே மனுக்கள் தாக்கல் செய்திருந்தன. மீதியுள்ள 3 மில்களில் ஒன்றான கதிரி மில் நஷ்ட ஈட்டை தந்துவிட்டனர். 35 மில்கள் பற்றிய தீர்ப்பு விபரமாக வந்துள்ளது. காண்ட் பற்றாக் குறை காலத்தில் கொடுக்கப்பட்ட அட்வான்ஸை நஷ்டஈட்டு பணத்திலிருந்து பிடிக்கக் கூடாது. மீனாக்ஷி குரூப் மில்களில் தீர்ப்புக்கு பின் 22 ரூபாய் அட்வான்ஸ் கொடுக்கப்பட்டுள்ளது. அந்த தொகையை பிடிப்பதில் கோர்ட் தீர்ப்பின் பிரகாரம் ஆக்ஷேபணையில்லை.

2. இம்மாத ஆரம்பத்தில் அப்பீல் கோர்ட்டிலே வாதாடின கேசுகளில் பிரதானமானவை— டிராம்வே, திருவொற்றியூர் விம்கோ, சென்னை ஹோ அண்டு கம்பெனி, ஸ்டாண்டர்டு வாக்குவம் ஆயில் கம்பெனி முதலியன வாகும். டிராம்வே S. V. O C. கேசுகளில் மோகன் குமாரமங்கலமும், விம்கோ கேசில் டி. எஸ். ராமானுஜமும், ஹோ அண்டு கோ கேசில் ஏ. எஸ். கே. அய்யங்காரும் ஆஜராயினர். மே தினத்தில் லீவு எடுத்தால் ஸ்டிரைக் அல்ல என S. V. O. C.யில் தீர்ப்பு செய்து 6 பேரை வேலைக்கு எடுக்க முடிவானது.

**மத்திய சர்க்கார் தலையீடு**

3. டிராம்வே கேசு மிக முக்யமானது. டிராம் கம்பெனி மூடப்பட்டது. ஆகையால் ரிஸர்வ் நிதியில் பாதி தொழிலாளர்கட்கு விநியோகிக்க வேண்டுமென கீழ் கோர்ட் தீர்ப்பு கொடுத்தது. இதையும் முதலாளி எதிர்த்து அப்பீல் செய்துள்ளார். ஆச்சரியம் என்னவென்றால் மத்திய சர்க்காரும் அப்பீல் செய்தது. மத்திய சர்க்காரும் குறிப்பிடுவது என்ன? "தீர்ப்பு வெளி வந்தவுடன் பல முதலாளி ஸ்தாபனங்கள் எங்களிடம் முறையிட்டன. இத்தீர்ப்பு தொழில் அபிவிருத்தியையும் மூலதனம் சேருவதையும் தடுக்கும். ஆகையால் வியாபார உலகில் பீதி ஏற்பட்டுள்ளது. ஒவ்வொரு மாகாணத்திலுள்ள முதலாளி ஸ்தாபனங்களும் இதே அபிப்பிராயத்தையே வெளியிட்டுள்ளனர். இந்த அபிப்பிராயங்களை சிரமேற்கொண்டே நாங்களும் அப்பீல் செய்கிறோம்" இது மிக விசித்திரமான வாதம். இம்முறையில் மத்திய சர்க்கார் தலையிட்டால் தொழிலாளர்கட்கு நம்பிக்கையும் உற்சாகமும் எங்கிருந்து பிறக்கும். இப்போக்கை இந்திய தொழிலாள வர்க்கமும் எல்லா ஜனநாயக வாதிகளும் எதிர்க்க வேண்டியது அவசியம். மாகாண சர்க்காரின் போக்கு என்ன? இம்மாதிரி அப்பீல் செய்யக் கூடாது எனக் தடுத்தார்களா? அதுவும் தெரியவில்லை.

நிற்க, ஷெடி விசாரணை 6-8-54 தேதி எடுத்துக்கொள்ளப்பட்டது. ஜட்ஜுகள் வலியுல்லாவும் பஸ்னி பிரசாதும் சிறிது நேரம் விவாதங்களை கேட்டபின்பு கிட்டதட்ட கீழ்க்கண்ட முடிவை கொடுத்தனர். "கம்பெனி மூடினால் ரிஸர்வ் நிதியில், தொழிலாளர்கட்கு பங்குண்டா என்பதே பிரச்னை. இதைப்பற்றி அப்பீல் கோர்ட் ஏற்கனவே எவ்விதமான தீர்ப்பும் கொடுத்ததில்லை. விஷயம் முக்யமானதால் பூர்ணமாக விவாதித்து ஓர் நல்ல முடிவுக்கு வர புல்பெஞ்சுக்கு இப்பிரச்னையை விட்டுவிடுகிறோம்."

புல்பெஞ்சு என்றால் 2க்கு அதிகமாக–3, 4, 5 அல்லது 7 ஜட்ஜுகள் சேர்ந்து முடிவு கொடுப்பதாகும். இம்மாதிரித்தான் "போனஸ்" எப்படி வழங்கப்படவேண்டும் என்பதற்கு 1950ம் வருடத்தில் 5 ஜட்ஜ்கள் தீர்ப்பளித்தார்கள். அது "எல் ஏ. டி. பார்முலா" என வழங்கப்படுகிறது. போனஸ் விஷயமாக வாதாடிய தொழிற் சங்கங்களுக்கு இத்தீர்ப்பு நன்கு தெரியும். சமீபத்தில் அதாவது 18-6-54ல் போனஸ் நிதியை பிராவிடண்ட் பண்டில் சேர்க்கக் கூடாதென பம்பாயில் 3 ஜட்ஜுகள் தீர்ப்பளித்துள்ளனர்.

**கே. டி. கே.**

சில மாதங்களுக்குள் டிராம்வே பிரச்னை கோர்ட்டின் முன் வரலாம். அதற்கு முன்பு மத்ய சர்க்காரின் போக்கைக் கண்டித்து ஓர் வலுவான இயக்கம் நடத்தப்பட வேண்டியது மிகமிக அவசியமென கருதுகிறேன்.

**உரிமைகள் பறிபோக விடோம்**

4. இக்கட்டுரைகளின் பிரதான நோக்கம் தொழில் அப்பீல்கோர்ட் விதிகள் பற்றியும், சில பிரதான அம்சங்கள் பற்றியும் குறிப்பிடுவதே. சட்டபார்வையால் ஏற்படும் கஷ்டங்களையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். முதலாவதாக தாங்க முடியாத கால தாமதம் ஏற்படுகிறது. மதுரை கோதண்டராம் மில் 28 பேர் சம்பந்தமாக மதுரை கோர்ட் 1952ம் வருடம் ஜூலை மாதம் விசாரணை ஆரம்பித்து 1953ம் வருடம் பெப்ரவரி மாதம் தீர்ப்பை வெளியிட்டது. அப்பீல் கோர்ட் தீர்ப்பு 1954ம் வருடம் ஜூலை மாதம்தான். அதுவும் ஏதோ சட்ட நுணுக்கத்தால் தொழிலாளர்கட்கு பயனற்றுப் போய்விட்டது. பஞ்சாலை மின்சார நஷ்டஈட்டுக்கு 1953ம் வருடம் மே மாதம் கோர்ட் நியமிக்கப்பட்டது. 1954ம் வருடம் பெப்ரவரி மாதம் தீர்ப்பு வெளியானது. முதலாளிகள் அப்பீல் செய்தனர். அப்பீல் என்று வருமென நமக்கு தெரியாது. சிறு தவறுகளைக் காரணமாகக் காட்டி தொழிலாளர்கள் அப்பீல் தள்ளுபடி செய்யப்படுகிறது. கோளா ரப்பர் எஸ்டேட்டில் வேலை செய்த 6 தொழிலாளர்களை நீக்க முதலாளி கீழ் கோர்ட்டில் ஆர்டர் வாங்கிவிட்டார். 5 தொழிலாளிகள் அப்பீல் செய்தனர். 30 நாளைக்குள் அப்பீல் செய்வதற்கு பதில் 50 நாட்களுக்குள் அப்பீல் செய்தனர். காலதாமதத்தை காட்டி அப்பீலை டிஸ்மிஸ் செய்தது கோர்ட். முதலாவதாக கீழ்கோர்ட் தீர்ப்பை கோர்ட்டில் வாசிக்கவில்லை. 7 தினங்கள் கழித்துத்தான் சங்கத்துக்கு கிடைக்கிறது. 5 பேருக்கும் அப்பீல் செய்ய ரூ. 125 சேகரிக்கவேண்டும். இத்யாதி கஷ்டங்கள் உண்டு. இவைகளை கோர்ட்டார் கவனிக்க மறுக்கின்றனர்.

தொழிற் சங்கங்களே தங்களுடைய பலத்தால் பல நியாயங்களைப் பெறவேண்டும். ஆட்களை டிஸ்மிஸ் செய்வதற்கு அனுமதி கோரி மனுப்போடுமளவுக்கு முதலாளிக்கு தெம்பு கூடாது. அவ்விதமாக தொழிலாளிகளை டிஸ்மிஸ் செய்ய 33 மனுவில் உத்தரவு கிடைத்தாலும், ஷெடி தொழிலாளிகளை நிறுத்தினால் தொழில் அமைதிக்கு பங்கம் ஏற்படும் என்ற நிலையை சர்க்கார் உணரவேண்டும். அப்படி ஏற்பட்டால் முதலாளி டிஸ்மிஸ் செய்ய பயப்படலாம் அல்லது அதே பிரச்னையை சர்க்கார் தொழில் கோர்ட்டுக்கு விடலாம். திருப்பூரில் ஆஷர்மில் வடிவேலு இம்முறையில்தான் நீக்கப்பட்டார். அப்பீலில் தோல்வியடைந்தது. தொழிற்சங்க ஊழியர்கள் நீக்கப்படுவதையும் பெற்ற உரிமைகள் பறிக்கப்படுவதையும் தொழிற் சங்க இயக்கம் அனுமதிக்கமுடியாது.

இத்துடன் LAT பற்றிய கட்டுரையை முடிக்கலாமென நினைக்கிறேன். 13-8-54 வரைதான் சென்னையில் கோர்ட் நடைபெற்றது. சங்க ஊழியர்களின் ஆலோசனையும் விமர்சனமும் தேவை.

வணக்கம்,

# சென்னையில் கால்பந்து போட்டி

## கட்சி பேதமின்றி ரசித்தனர்

சென்னை கார்ப்பரேஷன் ஸ்டேடியத்தில் ஜூலை மாதம் 24ந்தேதி முதல் இம்மாதம் 14 தேதிவரை கால்பந்து போட்டி நடைபெற்றது. தினசரி மாலை ஆயிரக்கணக்கான மக்கள் சாரை சாரையாக ஸ்டேடியத்தை நோக்கிச் செல்வதைக் கண்டோம். ஒவ்வொரு தினமும் 10.000 மக்களுக்கு குறையாமல் கண்டு மகிழ்ந்தனர். பம்பாயும் சென்னையும் விளையாடின தினத்தில் 20,000 பேரும், பம்பாயும் சர்வீசும் விளையாடிய பைனலில் 25,000 மக்களும் கண்டு களித்தனர். குறைந்த கட்டணம் 0-12-0 ஆக இருந்தபோதிலும் மக்களுடைய உற்சாகத்தைத் தடுக்க முடியவில்லை. கடைசி தினத்தில் டிக்கட் கிடைக்காமல் ஏமாந்து திரும்பியவர் பலர் 2-0-0 டிக்கட் வாங்கி நின்றுகொண்டு பார்த்தனர் நூற்றுக்கணக்கானவர்கள்.

இவ்வுற்சாகத்துக்குக் காரணம் என்ன? புட்பால் ஓர் விருவிருப்பான ஆட்டம் என்பது ஒன்று. இந்தியாவிலுள்ள சகல மாகாணங்களும் பங்கெடுத்துள்ளன. திரு-கொச்சி, சென்னை, மைசூர். ஆந்திரா, ஒரிசா, அசாம், ராஜஸ்தான் ஹைதராபாத், பீகார், டில்லி, பஞ்சாப், வங்காளம், மத்யபாரத்-முதலியன. கி. வங்காள டீமுடன் சோவியத் யூனியன் சுற்றுப்பிரயாணம் செய்த தங்கராஜ், அளகர்சாமி, கிட்டு முதலியோர் விளையாடினர். அகில இந்திய புகழ் ஆசிய நாடுகள் சென்ற லெயிக், மொயின், டிசூசா, பாாப், மன்னு, பெர்ல், லாஸ்டாக் முதலிய மின்னல் விளையாட்டுக்காரர்கள் விளையாடினர். இந்த விளையாட்டுப் பந்தயம் ஆரம்பிப்பதற்கு முன் ஒரு வாரமாக பட்டாளத்திலுள்ள பல டீமுகள் விளையாடின. அவைகளில் பொறுக்கி எடுக்கப்பட்ட 11 பேர்கொண்ட சர்வீஸ் டீமும் பங்கெடுத்தது. ஆகவே நல்ல விளையாட்டைக் கண்டு ரசிக்கும் சென்னை மக்களுக்கு இது ஓர் நல் விருந்தாகவே முடிந்தது.

ஜூலை மாதம் 24ம் தேதியே மக்கள் கணக்குப்போட ஆரம்பித்தனர். யார் பைனலுக்கு வருவார்கள்? மேல் ரவுண்டில் ஹைதராபாத், வங்காளம், கீழ் ரவுண்டில் சென்னை, மைசூர் இந்த 4 டீமுகளில் ஏதாவது இரண்டு தான் வரும் என்பது விஷயமறிந்தோர் கணக்கு ஆனால் இந்த 4 டீமுகளில் ஒன்றுமே பைனலுக்கு வரவில்லை. இதுதான் புட்பால். விளையாடும் தினத்தில் ஏற்படும் உற்சாகத்தாலும் எதிரிகளின் கவனக் குறைவாலும் சில டீம்கள் ஜெயித்துவிடுகின்றன. சர்வீசஸ் டீம் ஹைதராபாத்தையும் வங்காளத்தையும் தோற்கடித்து பைனலுக்கு வந்தது. மைசூர் பீகாரிடம் தோல்வியடைந்தது. சென்னையை பம்பாய் தோற்கடித்தது. பீகாரை செமி பைனலில் தோற்கடித்து பம்பாய் பைனலுக்கு வந்து பைனலிலும் வெற்றியடைந்தது,

இந்த விளையாட்டுகளில் முதன் முதலாக பங்கெடுத்த ஆந்திரா நல்லமுறையில் ஆடினார்கள். முதலில் பீகாரை ஜெயித்துவிட்டார்கள் 1 கோல் போட்டு. ஆனால் பீகார் ஆக்ஷேபித்தது, ஆக்ஷேபனை எடுத்துக்கொள்ளப்பட்டதால் மீண்டும் விளையாடினார். மூன்றாவது முறையாக பீகார் ஜெயித்தது. செமி பைனல்வரை பீகார் வந்தது அவர்களின் பிடிவாத விளையாட்டையே குறிப்பிடுகிறது. செமி பைனலில் பம்பாயிடம் தோல்வியடைந்தனர். சென்னை கோஷ்டியினர் நன்றாகவே விளையாடினார்கள். திரு-கொச்சியையும் டில்லியையும் ஜெயித்து பம்பாயை சந்தித்தனர். பம்பாயுடன் அவர்கள் விளையாடிய இரண்டுநாள் விளையாட்டுகளையும் பார்த்தவர்கள் பல வருடகாலம் மறக்கமாட்டார்கள். முதல் நாள் விளையாட்டில் பிற்பகுதியில் பம்பாய் ஒருகோல் போட்டது. உடனே மின்னல்போல் தாக்கினார்கள் சென்னை கோஷ்டியினர். பம்பாய் கோலில் பலத்த தாக்குதல். கடைசியில் ஒருகோல்போட்டு டிரா ஆனது. இரண்டாம் நாள் விளையாட்டில் பம்பாய் ஒரு கோல் போட்டது. தங்கராஜ் போட்ட கோல் நிராகரிக்கப்படவே ஜனங்களுக்கு ஆத்திரம். என்செய்வது. பொதுவாக சென்னையின் ஆட்டம் ஜொலித்தது தோற்றாலும் நன்கு விளையாடிய வீரர்களாகவே, தோன்றி சென்னைக்கு பெருமையை உண்டாக்கினர்.

14-ந் தேதி நடைபெற்ற பைனல்பற்றி. ஏற்கனவே குறிப்பிட்டபடி "பம்பாய்–சர்வீசஸ்" போராட்டம். இரு சாராரும் ஓய்வு ஒழிச்சலின்றி ஆடி மக்களின் நன்மதிப்பைப் பெற்றனர். முதலில் பம்பாய் கோல் போட்டது. சர்வீசஸ் அந்த கோலை திருப்பியது. சர்வீசஸ் கோலி நிதானம் இழந்தார். 50 கஜ தூரத்திலிருந்து டிசூசா அடித்த கோலை தடுக்க முடியவில்லை. பம்பாய் கோல் கீப்பர் சஞ்சீவையா பிரமாதமாக ஆடினார். பொதுவாக பம்பாய்க்கு கிடைத்த வெற்றி சரி என்பதே மக்களின் தீர்ப்பு. ஏ. எல். முதலியார் தலைமைவகித்தார். இரு சாராருக்கும் கப்புகள் வழங்கப்பட்டன.

இவ்விளையாட்டுகளில் கண்ட உற்சாகத்தையும்; ஒவ்வொரு கட்சியாரும் கூட்டுமுறையில் செயல்படுவதையும், மாகாண வேற்றுமை தலைகாட்டாத சிறந்த ஒற்றுமையையும் கண்டே இதை எழுத துணிந்தேன். புட்பால் போன்ற விளையாட்டை சோவியத், கீழ் ஐரோப்பிய இதர நாடுகள் போற்றி வளர்ப்பது இதனாலன்றோ?

(நமது விளையாட்டு பகுதி நிருபர்)

### வீட்டு வரி உயர்வுக்குக் கண்டனம்

நெல்லை ஜில்லா கடையநல்லூர் பஞ்சாயத்து போர்டு திடீரென்று வீட்டு வரியை 20 சதவிகிதம் உயர்த்தியிருப்பதைக்கண்டித்தும், உயர்வை உடனே ரத்து செய்ய வேண்டுமெனக் கோரியும் 16–7–54ல் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம் தோழர் பெருமாள் ராஜா தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் எஸ். முப்புடாறி, ஆர். அழகிரிசாமி, கே. ஆர். பெருமாள்சாமி, எஸ். ஏ. பாலு முதலியோர் சொற்பொழிவாற்றினர்.

### 1279 பேர் கொண்ட பொதுஜன மகஜர்

ஜில்லா போடு தேர்தலில் ஓட்டளிக்கும் முறையை மாற்றியதைக் கண்டித்து தென்காசி, கடையநல்லூர் பொது மக்கள் 1279 பேர் கையெழுத்திட்டு முதலமைச்சர் காமராஜருக்கு ஒரு மகஜர் அனுப்பியிருக்கிறார்கள்.

# உணவு தர வழியற்ற உ

# ஏழு வருட ஆட்சிக்குப்பின் ஜனப்பெரு

## ஆக்கத்திட்டங்களின் அடிப்படைகள் மாறவேண்டும்

**E. M. S. நம்பூதிரிபாட்**
'நியூ ஏஜ்' பத்திரிகையில் எழுதியுள்ள கட்டுரையின் சாரம்

"வழிபடும் கோயில்கள்! பொது நலத்திற்காக மக்கள் இரத்தமும் வியர்வையும் தந்து, கஷ்டப்பட்டு உழைத்துவரும் புனித ஸ்தலங்கள்" என்று பாக்ரா நங்கால் போன்ற வெகுலட்சிய நதிதீரத் திட்டங்களைப்பற்றிப் பிரதமர் நேரு கூறியுள்ளதைக் கோட்பாடாகக் காட்டி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் பிரசுரிக்கப்படும் 'எக்னமிக் ரெவ்யூ' பத்திரிகையில் ஸ்ரீ எஸ். என். அகர்வால் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார்.

இந்தியாவைப் புனருத்தாரணம் செய்வது மகோன்னதமான புனிதக் கடமை என்றும், இத்தகைய நதிதீரத் திட்டங்கள் நமது பொருளாதார அபிவிருத்திக்கு உறுதியான அஸ்திவாரமாக அமையுமென்றும், நமது கனவான புதிய இந்தியாவை உருவாக்கத் தகுந்த மிகப்பெரிய முயற்சி எனவும் அவர் அக்கட்டுரையிலே வர்ணித்திருக்கிறார்.

இந்த எண்ணங்களெல்லாம் நடைமுறையில் சாத்தியமானால் நமது நாட்டை நேசிக்கும் அனைவரும் மகிழ்ச்சியுடன் வரவேற்பர். இந்தத் திட்டங்களின் விளைவாக நமது உணவுப் பிரச்சினை தீர்க்கப்படுமானால், மூலப் பொருள்களின் பற்றாக்குறைகள் போக்கப்படுமானால் நாமெல்லோருமே மனதார ஆதரிப்போம்.

### ஜனத்தொகை கண்டு பீதி

ஆனால் உண்மை நிலை இதற்கு எதிர்மாறாக இருக்கின்றது. ஒருபுறம் இந்தத் திட்டங்களால் விவசாய உற்பத்தி பெருகி உணவு நெருக்கடி தீரும், மூலப்பொருள்கள் மலையாகக் குவியும் என்று பெருமையடித்துக் கொள்ளுகிறவர்கள் ஜனத்தொகையும் உணவுற்பத்தியும் பற்றி விஞ்ஞான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு முடிவாக உணவுப் பிரச்சினை தீர குடும்பக் கட்டுப்பாடு-நிர்ணயம் அவசியம் என்று வலியுறுத்துகின்றனர்.

இந்த வெகு லட்சியத் திட்டங்களை வகுத்துக் கொடுத்த திட்டக் கமிஷனே என்ன கூறுகிறது பாருங்கள்:

"அண்மையில் இந்தியாவில் அதிகரித்துவரும் ஜனத்தொகையும் நாட்டிலுள்ள வரம்புக்குட்பட்ட செல்வத்தின்மீது ஏறும் பளுவும்—குடும்பக் கட்டுப்பாடு-ஜனத்தொகை கட்டுப்பாட்டுப் பிரச்சினையின் அவசர அவசியத்தை முன்னணிக்குக் கொண்டுவந்துள்ளன. வைத்திய அறிவைக் கையாள்வதாலும் சமூகப் பாதுகாப்பினாலும் இறப்பவர் எண்ணிக்கை குறைந்துள்ளது. பிறப்புக்களின் தொகை பொதுவாக நிலைத்து நிற்கிறது. இதனால் ஜனத்தொகை அதிகரிப்பு துரிதப்பட்டுள்ளது. வாழ்க்கைத் தரத்தை அபிவிருத்தி செய்தால் பிறப்புக்களின் விகிதம் குறையலாம். ஆனால் அதற்கேற்றாற்போல ஜனத்தொகை பெருகிக் கொண்டேபோனால் இந்த அபிவிருத்திகள் நடைமுறையில் வரா.

எனவே தேசியப் பொருளாதாரத்தின் தேவையை அனுசரித்து ஜனத்தொகையை திடப்படுத்தும் அளவுக்கு அவசியமாகப் பிறப்பு விகிதத்தைக் குறைத்துக்கொள்வதன் மூலமே ஜனத்தொகைக் கட்டுப்பாட்டைச் சாத்தியமாக்கலாம் என்பது தெளிவு. பொதுமக்கள் விரிந்த அளவுக்கு குடும்பக் கட்டுப்பாட்டின் அவசியத்தை உணர்ந்து கொண்டால்தான் இதைப் பெறமுடியும்."

### உணவுத் தட்டுப்பாடு ஏற்படுமா

திட்டக் கமிஷனின் இந்த முடிவுக்கு ஆதாரவு தேடவே ஜனத்தொகை பற்றிய அறிக்கை முற்றுக் கையாளப்பட்டிருக்கிறது. இதன் ஆசிரியரான திரு. கோபால சுவாமி ஜனத்தொகை வளர்ச்சியும் உணவுற்பத்தியும் எப்படி இயங்குகின்றன என்பதை எடுத்துக்காட்டிப் பின்வரும் முடிவுகளுக்கு வந்திருக்கிறார்:

முதலாவதாக 1951ல் நமதுஜனத்தொகை 36 கோடியாக இருந்தது. 1961ல் 41 கோடியாகவும், 1971ல் 46 கோடியாகவும், 1981ல் 52 கோடியாகவும் அதிகரிக்கும்.

இரண்டாவதாக நமது நாட்டிற்கு தேவையான உணவுப்பொருள் 1951ல் வருடத்துக்கு 750 லட்சம் டன் (700 லட்சம் உள்நாட்டிலும் 50 லட்சம் டன் இறக்குமதிசெய்தும் கிடைப்பது) ஆக இருப்பது 1961, 1971, 1981 வருடங்களில் முறையே 850, 960, 1080 லட்சம் டன்களாக ஏறிவரும்.

மூன்றாவதாக இன்றுள்ள அளவுக்கு உணவுப் பொருள்களை உபயோகித்தாலும் கூட அதிகரித்து வரும் ஜனத்தொகைக்கு நிகராக உள்நாட்டில் உணவுற்பத்தி 1961, 1971, 1981ம் ஆண்டுகளில் முறையே வருடந்தோறும் 150, 260, 380 லட்சம் டன்கள் 1951ம் உற்பத்தியை விட உபரியாகத் தேவை.

நாலாவதாக சிறிய பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களை எல்லாம் வைத்துக்கொண்டாலும் கூட 1981ம் ஆண்டில் அதிகப்பட்ச உற்பத்தி 240 லட்சம் டன்களாக இருக்கும்.

ஐந்தாவதாக இந்த அபிவிருத்திதான் அதிகப்பட்ச உற்பத்தியின் உச்சமாகத் தெரிவதால் 1981க்கு பின்னால் ஜனத்தொகை அதிகரிக்குமானால் அதற்கேற்றாற்போல் உணவுத் தட்டுப்பாடு ஏற்படும்.

ஜனத்தொகை கணக்கு கமிஷனரும், திட்டக் கமிஷனும் நம் முன் வைத்துள்ள இந்த பயங்கர முடிவுகளை வழிபடும் கோவில்களாக வானளாவப் புகழப்படும் நதிதீரத் திட்டங்களால் மாற்றிவிடமுடியும் என்று நமது பிரதம மந்திரியோ காங்கிரசின் பொதுக் காரியதரிசியோ நம்புகிறார்களா? என்ற கேள்வி எழுகிறது. இல்லை என்ற பதிலே இயல்பாக வரும். காலத்தில் மழைபெய்தும், இத்திட்டங்களின் பயனாலும் உற்பத்தி சிறிது தற்காலிகமாக அபிவிருத்திப்பட்டது என்பதுதான் தவிர திட்டக் கமிஷன் ஜனத்தொகை கமிஷன்களின் விமரிசனங்களை மாற்றிவிடவில்லை.

### அடிப்படைகள் மாறவேண்டும்

இந்தத் திட்டங்களின் மூலாதாரமான அடிப்படைகள் தீவிரமாகச் சீர்திருத்தப்பட்டால் இவை உண்மையாகவே மக்கள் வழிபடும் கோயில்களாக' வளம்பெறும். தற்கால சாந்தி என்று தேம்பவேண்டியிராது.

திட்டங்களும் ஆக்கப் பணிகளும் நம் நாட்டில் மாத்திரம் உள்ளவையல்ல. கால் நூற்றாண்டுக்கு மேலாக அவை சோவியத் நாட்டில் வெற்றிகரமாகச் செயல்பட்டு வருகின்றன. இன்று கிழக்கு ஐரோப்பிய மக்கள் ஜனநாயகங்களிலும், மக்கள் சீனாவிலும் நடைமுறையில் இருக்கின்றன. அந்நாடுகளில் விவசாய-தொழில் துறை உற்பத்தி இந்தியாவைவிட வேகமாக அதிகரித்திருக்கிறது. ஜனத்தொகை கூடிவிட்டதே உற்பத்தி பெருகவில்லையே என்று இந்நாடுகளின் தலைவர்கள் நம் நாட்டைப்போல ஒப்பாரி வைத்து ஓலமிடுவதில்லை. அதற்கு மாறாக நாளொரு மேனியாக வளரும் விவசாய-தொழில் உற்பத்தியையும்-உயரும் வாழ்க்கைத்தரத்தையும் ஏறும் ஜனத்தொகையையும் காண்கிறார்கள்.

மனிதவர்க்கத்தின் ஆற்றல்களிலே அசையாத நம்பிக்கை கொண்டு, விஞ்ஞானத்தின் பெருதவியால் விவசாய-தொழில் துறையில் நேரிடும் உற்பத்திப் பிரச்சினையைச் சமாளிக்கலாம் என்று கூறுவது கண்டு ஜனத்தொகை கமிஷனர் சீறி விழுகிறார். கூட்டுப் பண்ணை முறைகளில் விஞ்ஞானப் புதுமைகளை உபயோகித்து உற்பத்தியை வேண்டும் அளவுக்கு அதிகரித்துக்கொள்ளலாம் என்று கருதப்படுதலைக் காய்கிறார். அப்படி நம்புகிறவர்களை விஞ்ஞான விக்ரக ஆராதனைக்காரர்கள் என்று வர்ணிக்கிறார்.

### பிழை எங்கே?

விஞ்ஞான முறைகளைப் பின்பற்றினால் உற்பத்தியைப் பெருக்கலாம் என்று அபிப்பிராயங்கூறியவர்கள் சோவியத் நாட்டையோ பிற சோஷலிஸ்ட் நாடுகளையோ ஆதர்சமாக்கிக் கூறவில்லை. அவர்கள் அழுத்தமான ஏகாதிபத்திய நிபுணர்கள். 1944ம் ஆண்டு இந்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட பஞ்ச விசாரணைக் கமிஷன் இது சம்பந்தமாகக் கூறியதென்ன?

அவசியமான வசதிகள் அளிக்கப்பட்டால் உற்பத்தியில் அபரிமிதமான அபிவிருத்திக்கு இடமிருக்கிறது. டாக்டர் பர்ன்ஸ் என்ற நிபுணரின் கருத்துப்பிரகாரம் இன்றுள்ள உற்பத்தியை 30 முதல் 50 சதமானம் வரையில் விஞ்ஞான முறையில் விவசாயம் செய்வதன்மூலம் உயர்த்தலாம். யந்திரங்களை உபயோகிப்பதன் மூலமும் திறமையான முறைகளை எடுத்தாள்வது மூலமும் இது சாத்தியமாகும். ஆனால் போதிய பண வசதியோ, பயிற்சியோ இல்லாத இன்றைய இந்திய விவசாயிகளுக்கு இவற்றை உடனடி நடைமுறைக்குக் கொண்டுவருவது கடினம் என்று குறிப்பிட்டது.

எனவே பிழை விஞ்ஞானத்திடமல்ல. நிலத்தின் மேலுமல்ல. ஆனால் லட்சோப லட்சம் விவசாயி மக்களுக்கு விஞ்ஞான முறைகளை-புதிய கண்டுபிடித்தல்களை தமது உற்பத்தி வேலைகளில் ஈடுபடுத்தும் வசதிகள் இல்லை; வாய்ப்பில்லை.

இந்த உண்மையைக் கணக்கிலெடுக்க காங்கிரஸ் தலைவர்கள் மறுக்கிறார்கள். இதுகாறும் அவர்கள் நிறைவேற்றியுள்ள நிலசம்பந்தமான சட்டங்கள் சாமான்ய விவசாயிகளின் நிலைமையைக் கணிசமான அளவுக்கு உயர்த்த உதவவில்லை. ஒருபுறம் சில சலுகைகளைப் பெற்றிருந்தால் அவற்றை மட்டம் தட்டும் முறையில் மறுபுறம் நிலவுடைமையாளரின் தாக்குதலுக்கு ஆக்கமளிக்கப்பட்டிருத்தலைக் காணலாம். உதாரணமாகப் பார்ப்போம்:

### விவசாயிக்கு நன்மை இல்லை

(அ) ஜமீந்தாரி முறைக்கு எதிராகக் கொண்டுவரப்பட்ட சட்டங்கள் ஜமீந்தார்கள், தமது சொந்த வீட்டு நிலமாகப் பெருமளவுக்கு நிலம் வைத்திருக்கவும், அவற்றில் உழைக்கும் விவசாயிகளைத் தம் இச்சைபோல் நடத்தவும் இடமளித்துள்ளன.

(ஆ) ரயத்துவாரி பிரதேசங்களைப்பற்றிய சட்டங்களில் நோக சாகுபடி செய்யாத நிலச்சுவான்தாருக்கு சொந்த விவசாயம் என்று கூறி மீண்டும் நிலம்பெறும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது.

(இ) நிலச்சுவான்தாரின் நிலங்களைக் குத்தகைக்கு எடுப்போர் வாங்கும் விஷயத்தில்கூட அவர் சொந்தமாக விவசாயம் செய்யும் பரப்புக்குமேல் இருந்தால் மட்டுமே வாங்கலாம் என்று குறிப்பிடப்படுகிறது.

இச்சட்டங்கள் எல்லாம் பெரிய அளவுக்கு நிலவுடைமையாளர் நிலம் வைத்திருக்கலாம் என்ற அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்து நிற்கின்றன. இதைக் கைவிட காங்கிரஸ் தயாராக இல்லை.

இவற்றின் விளைவாக விவசாயிகளில் ஒரு பகுதியினருக்குச் சில நன்மைகள் கிடைத்தாலும், ஜமீந்தாரி-ஜாகிர்தாரி முறைகள் உள்ள பகுதிகளில் நிலவுடைமையாளரின் உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டாலும், பொதுவாக விவசாயி மக்கள் பாப்பராகிவரும் போக்கு விரைந்தபடியே இருக்கிறது. அதேபோல நிலம் உள்ளவர்கள் அதை இழந்து கூலி விவசாயிகளாக மாறுவதும் பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்ததுபோலவே அதிகரித்து வருகின்றது. இப்போக்கில்தான் நிலப்பிரபுத்துவ முறைகளை நிர்த்துளியாக்கிவருவதாகப் பறைசாற்றப்படும் புதிய சீர்திருத்தச் சட்டங்களும் இருக்கின்றன.

### ஆதிக்கம் அன்றதா?

(அ) நிலவுடைமையாளரின் நிலப்பரப்பு எத்தனை என்பதை வரம்பு கட்டுவதற்காக ஆலோசிக்கப்படும் சட்டங்களைப்பற்றி பத்திரிகைகளிலும், பிரசங்க மேடைகளிலும் பெருமையாக வர்ணிக்கப்படுகின்றது. நிலச்சுவான் முறையே இதனால் நிர்மூலமாக்கப்படும் என்று

## ஆசிய ஒற்று

### கல்கத்தா சமாதானக் க

ஜூலை 30லிருந்து ஆகஸ்டு 3ந் தேதிவரை அகில இ
சில் கல்கத்தாவில் கூடியது. ஆறு மாதங்களுக்கு மு
பெற்ற பின்னர் இதுகாறும் செய்யப்பட்ட இயக்கவே
உடனடி எதிர்கால வேலைமுறைகளை நிர்ணயிக்கவும்
கவுன்சில் கூடியது.

பெப்சு, பஞ்சாப், டில்லி, உத்தரப் பிரதேசம், பீஹார், வங்காளம், அஸ்ஸாம், திரிபுரா, ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், மத்தியப்பிரதேசம், மஹாராஷ்டிராம், குஜராத், பம்பாய், ஆந்திரா, தமிழ்நாடு முதலிய 16 ராஜ்யங்களிலிருந்து தங்கள் செழுமை மிக்க அனுபவங்களுடனும், இயக்கச் செய்திகளுடனும் ஏராளமான பிரதிநிதிகள் கூட்டத்தில் கலந்துகொண்டார்கள். சமீப காலத்தில் நடைபெற்ற எந்தக் கவுன்சில் கூட்டத்தைக் காட்டிலும் கல்கத்தா கூட்டம் மிகவும் விரிந்த அளவில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தது என்று துணிந்து கூறலாம். கடந்த ஆறு மாதங்களில் சமாதான இயக்கம் புதுப்புது பகுதிகளிடையிலும் பரவியிருக்கிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது.

சங்கீத சாம்ராட் பண்டிட் ஓம்கார்நாத் தாகுர், டாக்டர் முல்க்ராஜ் ஆனந்த் போன்ற சங்கீத, கலை, கலாச்சார உலகின் பெரும் பெரும் விற்பன்னர்கள் சமாதானக் கவுன்சில் கூட்டத்தில் பங்கெடுத்துக்கொண்டார்கள்.

அமெரிக்க-பாக் ராணுவ ஒப்பந்தத்தை எதிர்த்தும், காஷ்மீரிலிருந்து அமெரிக்கப் பார்வையாளர்களை வாபஸ் வாங்கவேண்டுமெனக் கோரியும், இந்தோ சீன யுத்தநிறுத்தத்திற்காகவும்; ஹைட்ரஜன் குண்டு போன்ற படுபயங்கர நாசகர ஆயுதங்களைப் பரீட்சை செய்வதைத் தடைசெய்யவேண்டுமென்றும், ஆசிய ஒருமைப்பாடு பந்தோபஸ்திற்காகவும் நம் நாட்டின் சகல பகுதிகளிலுமுள்ள சமாதானக் க[illegible]கள் இதுவரை

## சமாதானம் சுதந்திரத்திற்காக

### ஆசிய ஒற்றுமை மாதத்தைக் கொண்டாடுக

### கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

**செப்டம்பர் மாதத்தை ஆசிய ஒற்றுமை-ஒருமைப்பாடு மாதமாகக் கொண்டாடவேண்டுமென்று அகில இந்திய சமாதானக் கவுன்சில் அறைகூவல் விடுத்திருப்பதை வரவேற்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ கீழ்வரும் அறிக்கையை விடுத்துள்ளது.**

பிரதமர்கள் நேரு-சௌ என்லாயின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த சந்திப்பிற்குப் பின்னால், ஆசிய மக்களின் சுதந்திரத்தை நசுக்கி அழிப்பதற்காக என்றுமில்லா ஆக்ரோஷமுடன் ஏகாதிபத்திய வல்லரசுகள் தங்கள் முயற்சிகளைத் தொடர்ந்து தீவிரப்படுத்தி வருகிறார்கள். தென்கிழக்காசிய ராணுவக் கூட்டணி முதலிய ராணுவ ஒப்பந்தங்கள், ஏற்பாடுகள் மூலம் ஆசிய மக்களைப் பிளவுபடுத்தி, ஒருவர்மீது மற்றவரை உசுப்பி விடுவதற்காக மூர்க்கத்தனமான முயற்சிகள் நடைபெறுகின்றன.

ஏகாதிபத்திய வல்லரசுகளின் நிர்ப்பந்த பயமுறுத்தலுக்கு இந்தியா விசேஷ இலக்காகியிருக்கிறது. வட அட்லாண்டிக் ராணுவ கூட்டணியின் தலைவர்களான ஆங்கிலோ-அமெரிக்க ஏகாதிபத்தியங்களின் முழு ஆதரவு ஒத்துழைப்புடன் போர்த்துகீஸ் சர்க்கார், இந்திய மண்ணிலுள்ள தங்கள் திட்டுகளுக்கு ஏராளமான துருப்புகளையும், ஆயுதங்களையும் அனுப்பி வருகிறது. மிக துரிதமாக விமான நிலயங்களையும், தளங்களையும் நிறுவி இந்தியாவை பயமுறுத்தத் தொடங்கியிருக்கிறது.

அமெரிக்க-பாக் இராணுவ ஒப்பந்தம் கையெழுத்தாகியிருக்கிறது. அமெரிக்க இராணுவ தளபதிகளின் முன்னோடிப்படையும் ஆயுத தளவாடங்களும் பாகிஸ்தானுக்கு வரத் தொடங்கிவிட்டன. இதே சமயத்தில் இந்தியாவிற்கெதிராக யுத்த வெறிக் கெடுபிடி முடுக்கிவிடப்பட்டிருக்கிறது.

தென்கிழக்காசிய யுத்தக் கூட்டணிக்குள் நேரடியாக இல்லாவிட்டால், மறைமுகமாகவாவது இந்தியாவை இழுப்பதற்கு அமெரிக்க பிரிட்டிஷ் சர்க்கார்களின் சார்பில் இலங்கைப் பிரதமர் படுமுயற்சி செய்துவருகிறார்.

இந்தியாவின் அயல்நாட்டுக் கொள்கையை மாற்றி அமைக்க வேண்டுமென்றும், அமெரிக்க யுத்தக் கொள்கைகளுக்குப் பின்னால் அணிதிரள வேண்டுமென்றும், இந்தியாவிற்குள்ளேயே குறிப்பிட்ட சில தீய சக்திகள் குரல் எழுப்புகின்றன. இந்த அமெரிக்கப் பாதையில் செல்ல வேண்டுமென உபதேசிப்பவர்களில் சர்க்கார் வட்டாரங்களில் கணிசமான அளவு செல்வாக்குள்ள நபர்களும் இருக்கிறார்கள் என்று தெரியவருகிறது.

இந்தியாவின் அரசுரிமைக்கெதிராகவும், ஆசிய மக்களைப் பிளவுபடுத்தி நசுக்கி அழிப்பதற்காகவும், யுத்தப் பாதையில் உலகை இழுத்துச் செல்லவும் எத்தனிக்கும் இந்தத் தீய விஷம சக்திகளுக்கு எதிராக நம் மக்களின் சகல பகுதியினரையும் இந்தக்கணமே ஒன்றுதிரட்டவேண்டியது அதி அவசரமாகிவிட்டது. எனவே நேரு-சௌ ஒப்பந்தத்தின் ஐந்து கோட்பாடுகளுக்கு வெகுஜன ஆதரவு கோரியும், ஆசிய ஒற்றுமை, ஒத்துழைப்பு, கூட்டுப் பந்தோபஸ் பத்திற்காகவும் அகில இந்திய சமாதானக் கௌன்சில் விடுத்திருக்கும் வேண்டுகோளுக்கு சகல தேசபக்தர்களும், சுதந்திரம், சமாதானம் விரும்பும் சகல மக்களும், செவிசாய்த்து நடைமுறையில் செயலாற்ற வேண்டும்.

சமாதானம், தேசிய சுதந்திரத்திற்காக, இதுவரை நம் தேசமே கண்டறியாத வகையில், ஆசிய ஒற்றுமை ஒருமைப்பாடு மாதத்தில் மிகப்பிரம்மாண்டமான ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் நடத்தவேண்டும். இதற்கு வேண்டிய உடனடியான நடவடிக்கைகளை எடுக்கும்படி எல்லா உறுப்பினர்களையும், ஆதரவாளர்களையும். சகல யூனிட்களையும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவி அழைக்கிறது.

### சென்னை சமாதானக் கமிட்டி தீர்மானம்

கல்கத்தாவில் நடைபெற்ற சமாதானக் கவுன்சில் முடிவுகளை வரவேற்று 14-8-54ல் நடைபெற்ற சென்னை சமாதானக் கமிட்டிக் கூட்டம் தீர்மானங்களை நிறைவேற்றியது. தென் கிழக்காசிய ராணுவக் கூட்டணியில் சேரமுடியாதென இந்திய சர்க்கார் மறுத்துவிட்டதை இந்தக் கூட்டம் மிகவும் பாராட்டித் தீர்மானம் நிறைவேற்றியது.

# ...ற உதவாக்கரைத் திட்டம்

## ...ளப்பெருக்கத்தின்மேல் பழி

## ...வண்டும்

...டுமே வாங்கலாம் என்று குறிப்பிடப்படுகிறது.

இச்சட்டங்கள் எல்லாம் பெரிய அளவுக்கு நிலவுடமையாளர் நிலம் வைத்திருக்கலாம் என்ற அடிப்படை உரிமைகளைப் பாதுகாத்து நிற்கின்றன. இதைக் கைவிட காங்கிரஸ் தயாராக இல்லை.

இவற்றின் விளைவாக விவசாயிகளில் ஒரு பகுதியினருக்குச் சில நன்மைகள் கிடைத்தாலும், ஜமீந்தாரி-ஜாகிர்தாரி முறைகள் உள்ள பகுதிகளில் நிலவுடமையாளரின் உரிமைகள் கட்டுப்படுத்தப்பட்டாலும், பொதுவாக விவசாயி மக்கள் பாப்பராகிவரும் போக்கு விரைந்தபடியே இருக்கிறது. அதே போல நிலம் உள்ளவர்கள் அதை இழந்து கூலி விவசாயிகளாக மாறுவதும் பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்ததுபோலவே அதிகரித்து வருகின்றது. இந்த போக்கில் தான் நிலப்பிரபுத்துவ முறைகளை நிர்த்தூளியாக்கிவருவதாகப் பறைசாற்றப்படும் புதிய சீர்திருத்தச் சட்டங்களும் இருக்கின்றன.

### ஆதிக்கம் அற்றதா?

(அ) நிலவுடமையாளரின் நிலப்பரப்பு எத்தனை என்பதை வரம்பு கட்டுவதற்காக ஆலோசிக்கப்படும் சட்டங்களைப்பற்றி பத்திரிகைகளிலும், பிரசங்க மேடைகளிலும் பெருமையாக வர்ணிக்கப்படுகின்றது. நிலச்சுவான் முறையே இதனால் நிர்மூலமாக்கப்படும் என்று கூறப்படுகிறது. ஆனால் உண்மையில் குத்தகைக்கு விவசாயம் செய்யும் குடும்பங்கள் பல நடுத்தெருவில் நிற்க நேருகிறது. ஏன்? நிலவரம்பு என்ற பெயரால் நிலச்சுவான்தார்கள் தமது நிலங்களை குத்தகைக்காரர்களிடமிருந்து சொந்த விவசாயம் செய்ய எடுக்கிறார்கள். விவசாயிகள் வெளியேற்றப்படுகிறார்கள்.

(ஆ) கூட்டுறவு விவசாயப் பண்ணைகள் நிலை என்ன? இவற்றிலிருந்து விவசாயிகள் விரட்டப்படவில்லை என்பது உண்மைதான். ஆனால் உள்ளூர் பிரமுகர்களின் ஆதிக்கமே இதில் தாண்டவமாடுகிறது.

(இ) நிலப்பரப்புக்களை ஒன்று திரட்டிச் சேர்ப்பது, மாற்றி ஏற்றுக்கொள்வதுபோன்ற விஷயங்களிலும் பெரும் நிலவுடமைகள் பயன்பெற சிறு உடமையாளர் பாதிக்கப்படுகின்றனர்.

(ஈ) இறுதியாக விவசாயிகளின் தலையில் சமத்தப்படும் வரிகள் நிலவரியில் உபரிவரி, அபிவிருத்தி வரிகள் முதலியன விவசாயிகளைப் பாப்பர்களாக்குகின்றன.

எனவே இத்தகைய சட்டங்களின் விளைவாக ஒரு சிறு பகுதியினர் சில நன்மைகள் பெற்றாலும் பொதுவாக விவசாயிகள் பெரும்பாலோர் பாதிக்கப்படுகின்றார்கள். அதோடு காங்கிரஸின் நிலச்சீர்திருத்தம் அதன் பொருளாதாரத் திட்டத்தின் ஓர் அம்சமே. அதாவது இந்தியாவைத் தொழில் வளத்தில் பின்தங்கிய நாடாக— பிரதானமாக விவசாய நாடாக வைத்திருக்கவேண்டும் என்பதே அத்திட்டம்.

### அந்த மேனிக்கு அழிவில்லை

இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படைப் பிரச்சினைகள் பொதுவாகவும், கிராமப் பொருளாதாரம் குறிப்பாகவும் பிரிட்டிஷ் ஆட்சியில் இருந்த அந்த மேனி அழியாமல் இருக்கின்றன. கிராமப் புறத்திலுள்ள ஏழை மக்கள் பிழைப்புக்கு வழியின்றி வேலையில்லாத் திண்டாட்டத்தில் வேதனைப்படுகின்றார்கள். நமது நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கு இரண்டு விஷயங்கள் முக்கியமானவை என்பதை காங்கிரஸ் சர்க்கார் காண மறுக்கிறது. அவை என்ன?

முதலாவதாக—நவீன கால பெருந் தொழிற்சாலைகளை நிறுவி நாளுக்குநாள் பெருகிவரும் வேலையில்லாமல் திண்டாடும் கிராமப் புறப்புறத்து ஏழை மக்களுக்கு வேலைகொடுத்து உற்பத்தியில் ஈடுபடுத்துவதுமூலம் நிலத்தின் மீது ஜனத்தொகையின் பளு அதிகரிக்காமல் தவிர்க்கவேண்டும்.

இரண்டாவதாக: தொழிலபிவிருத்திக்கு ஏற்றாற்போல உள்நாட்டு மார்க்கெட்டை விரிவாக்க விவசாயி மக்களின் வாங்கும் சக்தியை அதிகப்படுத்த வேண்டும். இதற்கு அவர்கள் மேல் சுமந்துள்ள குத்தகை, கடன் சுமை, வரிப்பளு யாவும் குறைக்கப்பட வேண்டும்.

காங்கிரஸ் சர்க்கார் உழவும் தொழிலும் பெருக்க, பிரம்மாண்டமான திட்டங்களைப் போட்டுவிட்டதாக எல்லாம் தம்பட்டமடித்தாலும், கிராமியப் பொருளாதாரத்தில் நிலமற்ற - நிலப்பசிகொண்ட லட்சக்கணக்கான விவசாயிகள் வருடத்தில் பெரும்பகுதி வாடும் பசியால் - வேலையின்றித் திண்டாடுவதும் மிகச்சிறு பகுதி நிலவுடமையாளர் நீடித்துவருவதும் பிரதான அம்சங்களாக நிலவி வருதலைக் காணலாம்.

### நிலச்சீர்திருத்தச் சட்டங்கள்

காங்கிரஸ் சர்க்காரின் நிலச்சீர்திருத்தச் சட்டங்களுக்கு எதிராக விவசாயிமக்களிடையே அதிருப்தி வெடித்திருக்கிறது. எதிர்க்கட்சிகள் கண்டனம் செய்கின்றன. அதோடு காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே கருத்து வேற்றுமைகள் கடுமையாகின்றன. எனவே ஆஜ்மீரில் நடைபெற்ற அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் நிலச்சீர்திருத்தம்பற்றி குத்தகை

(11-ம் பக்கம் பார்க்க)

## பிரதிக்ஞை ஏற்கிறோம்!

இந்தியப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேருவும், சீனப் பிரதமர் சௌ-என்-லாயும் விடுத்த சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கூட்டறிக்கையில் கண்டுள்ள கீழ்வரும் ஐந்து கோட்பாடுகளுக்கும் எங்கள் மனப்பூர்வமான ஆதரவை அளிக்கிறோம்.

* பரஸ்பரம் ஒரு நாட்டின் எல்லையையும், சுதந்திர உரிமையையும் மதித்து நடக்கவேண்டும்.
* பரஸ்பரம் யுத்த ஆக்கிரமிப்பைக் கைவிட்டு விட வேண்டும்.
* ஒரு நாடு மற்றொரு நாட்டின் உள்நாட்டுப் பிரச்னைகளில் தலையிடக்கூடாது.
* ஒன்றுக்கொன்று சமத்துவமாக மதித்து, பரஸ்பரம் லாபகரமான முறையில் நடந்துகொள்ள வேண்டும்.
* எந்த நாடும் தான் அமைதியாக வாழ்வதுடன் பிற நாடுகளையும் அமைதியாக வாழவிடவேண்டும்

இந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் சகல நாடுகளும் இயங்கவேண்டுமென்றும், ஆசியாவிலும், உலகம் பூராவிலும், சமாதானத்தையும், பந்தோபஸ்தையும் பாதுகாக்க வேண்டுமென்றும் நாங்கள் கோருகிறோம்.

எத்தகைய காலதாமதமுமின்றி உடனடியாக சீன மக்கள் குடியரசை ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தில் சேர்க்க வேண்டுமென்றும் நாங்கள் கோருகிறோம்.

ஹைட்ரஜன் குண்டு முதலிய சர்வநாச ஆயுதங்களை உபயோகப்படுத்துவது சம்பந்தமாக நடப்பு நீடிப்பு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென பண்டித நேரு விடுத்த அறைகூவலை நாங்கள் ஆதரிக்கிறோம்.

அணுசக்தியை வைத்திருக்கும் நாடுகள், தாங்கள் அதை ஆக்க வேலைகளுக்கு மாத்திரமே உபயோகப்படுத்துவோம், அழிவு வேலைகளுக்கு அல்ல என்று பிரகடனம் செய்ய வேண்டுமென்றும் நாங்கள் கோருகிறோம்.

| பெயர் | விலாசம் | கையெழுத்து |
| --- | --- | --- |

மேற்கூறிய விண்ணப்பத்தில் பல்லாயிரக்கணக்கான கையெழுத்துக்களை சேகரித்து சென்னை சமாதானக் கமிட்டிக்கு அனுப்புங்கள்.

# ஒற்றுமை மாதம் கொண்டாடுக!

## ...மாதானக் கவுன்சில் கூட்டமுடிவுகள்

...கஸ்டு 3ந் தேதிவரை அகில இந்திய சமாதானக் கௌன்... ...து. ஆறு மாதங்களுக்கு முன் நாகபுரிக்கூட்டம் நடை... ...றும் செய்யப்பட்ட இயக்கவேலைகளைப் பரிசீலிக்கவும், ...லைமுறைகளை நிர்ணயிக்கவும் கல்கத்தாவில் சமாதானக்

பெப்சு, பஞ்சாப், டில்லி, உத்தரப் பிரதேசம், பீஹார், வங்காளம், அஸ்ஸாம், திரிபுரா, ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், மத்தியப்பிரதேசம், மஹாராஷ்டிரம், குஜராத், பம்பாய், ஆந்திரா, தமிழ்நாடு முதலிய 16 ராஜ்யங்களிலிருந்து தங்கள் செழுமை மிக்க அனுபவங்களுடனும், இயக்கச் செய்திகளுடனும் ஏராளமான பிரதிநிதிகள் கூட்டத்தில் கலந்துகொண்டார்கள். சமீப காலத்தில் நடைபெற்ற எந்தக் கவுன்சில் கூட்டத்தைக் காட்டிலும் கல்கத்தா கூட்டம் மிகவும் விரிந்த அளவில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்தது என்று துணிந்து கூறலாம். கடந்த ஆறு மாதங்களில் சமாதான இயக்கம் புதுப்புது பகுதிகளிடையிலும் பரவியிருக்கிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது.

சங்கீத சாம்ராட் பண்டிட் ஓம்கார்நாத் தாகுர், டாக்டர் முல்க்ராஜ் ஆனந்த் போன்ற சங்கீத, கலை, கலாச்சார உலகின் பெரும் பெரும் விற்பன்னர்கள் சமாதானக் கவுன்சில் கூட்டத்தில் பங்கெடுத்துக்கொண்டார்கள்.

அமெரிக்க-பாக் ராணுவ ஒப்பந்தத்தை எதிர்த்தும், காஷ்மீரிலிருந்து அமெரிக்கப் பார்வையாளர்களை வாபஸ் வாங்கவேண்டுமெனக் கோரியும், இந்தோ சீன யுத்தநிறுத்தத்திற்காகவும்; ஹைட்ரஜன் குண்டு போன்ற படுபயங்கர நாசகார ஆயுதங்களைப் பரீட்சை செய்வதைத் தடைசெய்யவேண்டுமென்றும், ஆசிய ஒருமைப்பாடு, பந்தோபஸ்திற்காகவும் நம் நாட்டின் சகல பகுதிகளிலுமுள்ள சமாதானக் க... ...கள் இதுவரை நடத்திவந்த மிகத் தீவிரமான இயக்கங்கள் அனைத்தையும் சமாதானக் கவுன்சில் மூன்று தினங்கள் விவாதித்து, ஆராய்ந்து பரிசீலித்தது.

### மக்களின் பெரும் பங்கு

அமெரிக்க-பாக் ஒப்பந்தத்தை எதிர்த்து நடத்திய மிக விரிவான ஐக்கிய இயக்கம்—அதில் என்னதான் குறைபாடுகள் இருந்தபோதிலும்—இந்திய மக்களின் உள்ளக் கிடக்கையை நன்கு உலகெங்கும் பறைசாற்ற உதவியது என்ற கவுன்சில் ஏகோபித்த அபிப்பிராயத்திற்கு வந்தது. மேற்கூறிய இயக்கங்கள் அனைத்திலும் நம் மக்களின் பல்வேறு பகுதியினரும் மிக அதிக அளவில் பங்கெடுத்துக் கொண்டார்கள். நாளுக்குநாள் அதிக அளவில் சமாதானத்தின் பால் நம் மக்கள் ஆகர்ஷிக்கப்படுவதையே இது தெளிவாக எடுத்துக் காட்டுகிறது. இதற்கு முன்னர் சமாதான இயக்கத்தில் கலந்து கொள்ளாமலிருந்தவர்கள்கூட, நாட்டை எதிர்நோக்கியிருக்கும் பிரச்னைகளைப்பற்றி விவாதிப்பதற்காக தாங்களாகவே சமாதான இயக்கத்திற்குள் வந்திருக்கிறார்கள். இந்தியாவின் சுதந்திரத்தையும், பந்தோபஸ்தையும் பாதுகாக்கவும், சர்வதேச யுத்த நெருக்கடியைக் குறைக்கவும் இதர சகல பகுதி மக்களுடனும் ஒன்று சேர்ந்து உறுதியாகப் பாடுபடுவோம் என்று பிரகடனம் செய்திருக்கிறார்கள்;

நம் நாட்டிலுள்ள முக்கியமான பல அரசியல் கட்சிகளில் இருப்பவர்களும்கூட. கொஞ்சங் கொஞ்சமாக சமாதான இயக்கத்தின்பால் ஆகர்ஷிக்கப்படுவதைப் பார்க்கிறோம். கடந்த ஆறுமாதங்களில் இந்த முக்கியமான அரசியல் பகுதிகள் யதார்த்த நடைமுறையில் சமாதானக் கவுன்சிலின் பணிகளுடன் மிக நெருங்கி ஒன்றி வந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. அமெரிக்க-பாக் ராணுவ ஒப்பந்தத்தை எதிர்த்தும், சர்வதேச யுத்த நெருக்கடியைக் குறைப்பதற்காகவும் டில்லியில் தேசியக் கன்வென்ஷன் நடைபெற்றது. இந்தக் கன்வென்ஷனில் சமாதான இயக்கத் தலைவர்களும் இதர முக்கியஸ்தர்களும், ஒரே நோக்கமுடன் பொதுமேடையில் தோன்றினார்கள். சமாதான இயக்கத்தில் ஏற்பட்டிருக்கும் இத்தகைய புதிய வளர்ச்சியினால், அந்த இயக்கத்தைப்பற்றிய நம் கண்ணோட்டம் முழுவதையுமே சீர்படுத்தி மாற்றியமைத்தாக வேண்டும்.

**வி. பரமேஸ்வரன்**
உலக சமாதானக் கவுன்சில் உறுப்பினர்.

### திருப்தி மனப்பான்மை கூடாது

தற்சமயம் சமாதான இயக்கத்திற்கு வெளியேயிருக்கும் வெகுஜன செல்வாக்குள்ள பகுதிகளுக்கும் சமாதான இயக்கத்திற்குமிடையே வளர்ந்துவரும் ஒற்றுமையை மேலும் விரிவுபடுத்தி, பலப்படுத்துவதெப்படி என்ற பிரச்னையை கவுன்சில் பரிசீலித்தது. சமாதான இயக்கத்திற்கும், பரந்து வளர்ந்துவரும் இந்த ஐக்கிய இயக்கத்திற்குமிடையே உறவு முறைகள் எப்படியிருக்கவேண்டும் என்ற பிரச்னையையும் சமாதானக் கவுன்சில் பரிசீலித்தது.

உலகெங்குமுள்ள சமாதான சக்திகள், ஜினிவா ஒப்பந்தத்தைக் குதூகலமாக வரவேற்று வெற்றிக் களியாட்டங்களில் ஈடுபட்டிருக்கும் சமயத்தில் கல்கத்தாவில் கவுன்சில் கூட்டம் நடைபெற்றது. ஜினிவாவில் இந்த மகத்தான வெற்றி ஏற்படுவதில் இந்திய மக்கள் ஆற்றிய மிகப் பெரும் பங்கைக் குறைத்து மதிப்பிடக்கூடாது. இந்தோ சீனப் பிரச்னையைத் தீர்ப்பதில், சமாதானம் விரும்பும் உலகமக்களுடன் சேர்ந்து இந்திய மக்களும் அரும்பாடுபட்டிருக்கிறார்கள். நம் மக்களின் இந்த தலைசிறந்த பணியைக் கவுன்சில் புகழ்ந்து பாராட்டியது. ஆனால் அதேசமயம் நம் சாதனைகளைக் கண்டு நாம் சுயதிருப்தியடைந்து விடக்கூடாது என்றும் அது சுட்டிக் காட்டியது. ஜினீவாவில் ஏற்பட்ட தோல்வியால் ஆத்திரமடைந்த சமாதான எதிரிகள், ஆசியாவைப் பிளவுபடுத்தவும், யுத்த நெருக்கடியைத் தீவிரப்படுத்தவும் முனைந்து நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கிறார்கள். கொரியாவில் யுத்தத்தை மீண்டும் தொடங்குவதற்காக அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் சகல முயற்சிகளும் செய்துவருகிறார்கள். ஜப்பானை மீண்டும் ஆயுதபாணியாக்கவும், தென்கிழக்காசிய ராணுவக் கூட்டணி அமைக்கவும் தீவிர முயற்சிகள் நடைபெறுகின்றன. ஆசிய மக்கள்மீது என்றென்றும் தங்கள் பிடிப்பை இறுக்கிக்கொள்வதற்காக ஏகாதிபத்தியவாதிகள் திட்டமிட்டுவருகிறார்கள். ஐக்கிய நாடுகள் சபையில் மக்கள் சீனாவிற்கு ஸ்தானமளிக்க மறுப்பதன் காரணமாக ஆசியாவில் யுத்த நெருக்கடி மேலும் தீவிரமடைவதற்கு ஏதுவாகிறது.

### ஆசிய ஒற்றுமை மாதம்

எனவே, ஏகாதிபத்தியவாதிகளின் இந்த முயற்சிகள் அனைத்தையும் முறியடிக்க வேண்டுமெனில், ஆசிய மக்களிடையே மிக நெருங்கிய ஒற்றுமை இருக்க வேண்டியது அவசியம் என்று கவுன்சில் கருதியது. இப் பிரச்னையை சமாதானக் கவுன்சில் நன்கு நுணுக்கமாகப் பரிசீலித்தது. நேரு-சௌ கூட்டறிக்கையில் உள்ள ஐந்து கோட்பாடுகளும் ஆசிய ஒற்றுமைக்கு அடிப்படையாக விளங்குகின்றன என்று தீர்க்கமான விவாதத்திற்குப்பின் ஏகமனதாகக் கவுன்சில் தீர்மானித்தது.

ஆசியாவின் பந்தோபஸ்து, ஒருமைப்பாட்டிற்காக, இந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் மிகப் பரந்த அளவில் நம் மக்களின் பல்வேறு பகுதிகளையும், வெவ்வேறு அரசியல் கருத்துக்கள் கொண்டோரையும்கூட, ஒன்றுதிரட்ட வேண்டுமென்று கவுன்சில் முடிவு செய்தது.

எனவே செப்டெம்பர் மாதத்தை ஆசிய, ஒற்றுமை-ஒருமைப்பாடு மாதமாக தேசம் பூராவிலும் கொண்டாட வேண்டுமென்று சமாதானக் கவுன்சில் அறைகூவல் விடுத்துள்ளது. நேரு-சௌ பிரகடனத்தில் உள்ள ஐந்து கோட்பாடுகளை ஜனங்களிடையே தீவிரப் பிரச்சாரம்செய்து பரப்பவேண்டுமென்றும் சமாதானக் கவுன்சில் சகல சமாதானக் கிளைக் கமிட்டிகளையும் வேண்டிக் கொண்டிருக்கிறது.

ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள், விவாதங்கள், வீட்டுக்குவீடு பிரச்சாரங்கள், கண்காட்சிகள்மூலம் செப்டெம்பர் மாதம் பூராவிலும் சகல பகுதி மக்களையும் சமாதான ஊழியர்கள் அணுகவேண்டும். இதன்மூலம் இந்திய மக்களின் சமாதான அபிலாஷைகளை திட்டவட்டமாக ஸ்தூலப்படுத்த வேண்டும்.

இந்த மாதத்தைக் கொண்டாடுவதற்காக தமிழ்நாடெங்கிலும் விரிவான அடிப்படையில் ஸ்தலக் கமிட்டிகள் நிறுவப்படவேண்டும். இந்தக் கமிட்டிகளில் பல்வேறு தரப்பட்ட கருத்துக்கள் கொண்டோரும் அங்கம் வகிக்கவேண்டும். தொழிலாளர்கள், விவசாயிகள், வியாபாரிகள், மாணவர்கள், படித்த வகுப்பினர், மாதர்கள் முதலிய சகல பகுதி மக்களையும் இந்தக் கமிட்டிகள் அணுகி, மகத்தான ஐந்து கோட்பாடுகளுக்கு ஆதரவு திரட்ட வேண்டும்.

### ஆக்கவேலைக்கு அணுசக்தி

கல்லூரிகள், பள்ளிகள், பட்டறைகள், தொழிற்சாலைகள் முதலியவற்றில் இத்தகைய கமிட்டிகளை அமைக்கவும், இந்த இயக்கத்திற்கு ஆதரவாக வாக்கெடுப்பு நடத்தவும் விசேஷ முயற்சிகள் செய்யவேண்டும். பெருவாரியான கையெழுத்துக்கள் வாங்குவதும் இந்த இயக்கத்தின் ஒரு அம்சமாக விளங்கவேண்டும். பார்லிமென்ட், சட்டசபை, முனிசிபல் கௌன்சில் உறுப்பினர்களையும், இதர முக்கியஸ்தர்களையும் அணுகுவதற்குப் பிரத்தியேகமான முயற்சி எடுக்கவேண்டும்.

அணுசக்தியை ஆக்கவேலைகளுக்குப் பயன்படுத்தினால் மனித குலத்தை எத்தகைய மகோன்னதமான வாய்ப்புகள் எதிர்நோக்கியுள்ளன என்பதையும் பொது மக்களுக்கு சமாதான ஊழியர்கள் எடுத்து விளக்கவேண்டும். ஏற்கனவே, சோவியத் யூனியன் அணுசக்தியை ஆக்கவேலைக்குப் பயன்படுத்திவருவதையும் எடுத்துக்கூற வேண்டும். பேரழிவை உண்டாக்கும் அணு, ஹைட்ரஜன் குண்டுகளைத் தடை செய்துவிட்டு, ஆக்கவேலைகளுக்கு அணுசக்தியைப் பயன்படுத்த வேண்டுமெனப் பெருங்கிளர்ச்சி செய்வது இன்றைய உடனடி அத்தியாவசியப் பிரச்சினையாகிவிட்டது.

செப்டெம்பர் மாதம் பூராவும் தமிழ் மக்கள் சமாதானப் பெருங் கோஷமுடன் திரண்டெழவேண்டும். ஆசிய ஒற்றுமை - ஒருமைப்பாட்டிற்காக சக்திமிக்க இயக்கத்தைக் கட்டி வளர்க்கவேண்டும்.

சமாதானம், ஆசிய ஒற்றுமை ஒருமைப்பாட்டிற்காக இந்திய மக்களின் பேரவையை டிசம்பர் மாதத்தில் கூட்டுவதென அகில இந்திய - சமாதானக் கௌன்சில் முடிவு செய்துள்ளது.

# டிராம் முதலாளியின் மோசடி

## ராஜ்ய சர்க்காரும் மத்திய சர்க்காரும் உடந்தை

**எம். கல்யாணசுந்தரம்**

சென்னை டிராம்வே பிரச்னை சமீபத்தில் சட்டசபையில் ஒத்திவைப்பு பிரேரபணை மூலமும், கேள்விகளின் மூலமும் கிளப்பப்பட்டது. இன்னும் ஒருவித முடிவும் எடுக்கப்படவில்லையென்று மந்திரிகள் கூறினார்கள். சில தினங்களுக்கு முன்பு தொழிலாளிகள் பிரதிநிதிகள் சந்தித்த பொழுது முதலமைச்சர் காமராஜ் நாடார், டிராமை ஓட்ட முயற்சிப்பதாக வாக்குறுதி கொடுத்தார். அவர் முதல் மந்திரி பதவியேற்றதிலிருந்து அதே உறுதிமொழி கொடுத்து வந்துள்ளாரென்பது அனைவரும் அறிந்ததே. ஆனால் உண்மையான நிலைமை என்ன?

டிராம்வே திடீரென்று 12-4-1953ல் நிறுத்தப்பட்டது. சென்னை நகரத்தில் போக்குவரத்து பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது குறிப்பாக ஏழை மக்களின் மலிவான போக்குவரத்து வசதி பாதிக்கப்பட்டது. சுமார் 2000 தொழிலாளிகள் குடும்பத்துடன் பட்டினி கிடந்து வருகின்றனர்.

### ராஜாஜி — காமராஜ் முயற்சிமேல் முயற்சி!

சி. ராஜகோபாலாச்சாரியார் மந்திரி சபையும் டிராம் நிறுத்தப்பட்டதிலிருந்தே, அதை ஓட்டுவதற்கு முயற்சி எடுப்பதாகச் சொன்னார்கள். சுமார் ஒரு வருட காலமாக முயற்சி செய்தும், ஒன்றும் செய்ய மாட்டாமல், முதல் மந்திரி பதவியிலிருந்து ராஜாஜி விலகி விட்டார். மிகத் திறமைசாலியான ராஜாஜி ஒரு வருட காலம் முயற்சி செய்தும் டிராம்வேயை ஓட்ட முடியவில்லை. அதன் பிறகு முதல் மந்திரி பதவிக்கு வந்த திரு. காமராஜ் நாடார் வெகு துரிதமான முயற்சிகள் எடுத்தார்! ஏழை மக்களுக்காக, அதிலும் குறிப்பாக தொழிலாளருக்காக அவரது மனம் உருகியது. சர்க்காருக்கு சிறிது நஷ்ட மேற்பட்டாலும் கூட டிராம்வேயை ஓட்ட வேண்டியது அவசியமென்று அறிக்கை விட்டார். அடிக்கடி அது கோஷ்டிகளை சந்தித்தார். பேச்சு வார்த்தைகளை நடத்தினார். கடைசியாக கார்ப்பொரேஷன் எடுத்து நடத்தினால், உதவி செய்யப் போவதாகவும் அறிவித்தார். சுமார் 2 மாத காலமாக காமராஜ் நாடாரவர்கள், "ஏழைகளின் நலனை முன்னிட்டு" உண்மையாக முயற்சி செய்தார்.

### இரும்பு வியாபார மர்மமென்ன?

முன்னர் ராஜாஜியும் ஒரு வருட காலமாக முயற்சிகள் எடுத்தும், அதன் பின், காமராஜ் நாடார் ஐந்து மாத காலம், உண்மையான முயற்சிகள் எடுத்தும், முடிவு என்னவாயிற்று?

பழைய இரும்பு வியாபாரம் செய்யும் கண்டிராக்டர்களுக்கு, டிராம் வண்டிகளும், இயந்திரங்களும் விற்கப்பட்டுவிட்டன. டிராம் வண்டிகள் ஓட்டப்படும் என்ற நம்பிக்கை அடியோடு தகர்ந்தது. மந்திரி சபையினர் உண்மையான முடிவை வெளியிட மறுத்து வருவதன் மர்மம் என்ன? மந்திரி சபையினரும், சென்னை கார்ப்பொரேஷனும் டிராமை ஓட்ட முயற்சிகள், பேச்சு வார்த்தைகள் நடத்தும் அதே சமயத்தில், டிராம்வே கம்பெனியின் வெள்ளைக்கார நிர்வாகஸ்தர்கள் இரும்பு வியாபாரிகளுக்கு விற்க உறுதியான நடவடிக்கைகள் எடுக்கும் தைரியம் எப்படி வந்தது? இதற்கு யார் உடந்தை? இவையெல்லாம் சிறிது மர்மமான விஷயங்கள்.

ஆரம்பத்திலிருந்து சர்க்காரின் ஆலோசகர்களான அதிகாரிகள் டிராமை சர்க்கார் எடுத்து நடத்த முட்டுக்கட்டை போட்டு வந்துள்ளனர். நஷ்ட மேற்படும் என்கிற பீதியைக் காட்டி மந்திரி சபையை குழப்பிவிட்டு, சர்க்கார் எடுக்காதபடி, ஆலோசகர்கள் பார்த்துக் கொள்வார்களென்கிற தைரியம், வெள்ளை நிர்வாகத்திற்கு இருந்திருக்கக் கூடும். அதனால் மக்களின் கோரிக்கைகளையும் அலக்ஷியம் செய்து, மந்திரி சபையையும் அலக்ஷியம் செய்து, டிராம்மே நிர்வாகம், வண்டிகளையும் இயந்திரங்களையும் 4 லக்ஷம் ரூபாய்க்கு, பழைய இரும்பு வியாபாரிகளுக்கு விற்று விட்டனர்.

டிராம்வேகம்பெனியிடமிருந்து சர்க்காருக்கு வரவேண்டிய பணம் மட்டும் $4\frac{1}{2}$ லட்சம் ரூ. இந்தத் தொகையை வசூலிக்கவேண்டியதை முன்னிட்டாவது சர்க்கார், உறுதியான நடவடிக்கை எடுக்கவில்லை.

### மக்களின் கண் முன்னால் டிராம்களை உடைக்கிறார்கள்

பழைய இரும்பு விலைக்கு விற்றால், சில தனிப்பட்ட நபர்களுக்கு லாபம் கிடைக்கும். ஆகவே ஒரு சில "ரகஸ்ய மனிதர்கள்" டிராம் ஓடுவதைவிட, பழைய இரும்பாவதே மேலென்று கருதி வந்துள்ளனர். அவர்கள்தான் வெற்றியடைந்தனர்.

வெள்ளை நிர்வாகத்தைப் பணியவைக்க சர்க்கார் சக்தியற்று நிற்கின்றனர். தாங்கள் ஏறி சவாரி செய்த டிராம் வண்டிகள் நொறுக்கப்படும் காட்சியை சென்னை மக்கள் காணநேரிடும். தனிநபரின் சுயநலம் பொதுமக்களின் போக்குவரத்தை நாசப்படுத்துகிறது. தொழிலாளிகளை பட்டினி போடுகிறது.

வெள்ளைக்காரன் போட்ட மூலதனத்திற்கு மேலாக பல மடங்கு லாபம், சென்னை மக்களையும், தொழிலாளிகளையும் உறிஞ்சி சம்பாதித்தாகிவிட்டது.

### யாருடைய சுதந்திரம்?

நஷ்டஈடின்றி டிராம்வேயை பறிமுதல் செய்யக்கூடாதா என்று கேட்டால், நமது அரசியல் சட்டம் இடம் தரவில்லை என்று பதில் வரும். 'தனிநபர் சுதந்திரம்' பறிபோய்விட்டது என்று கூக்குரல் போட்டனர். ஆனால் தொழிலாளியின் உத்தியோகத்தை பறிக்கலாம் அதற்கு நஷ்டஈடு வேண்டியதில்லை. அவன் குடும்பம் பட்டினி கிடந்து சாகலாம். நமது "ஜனநாயகக் குடியரசில்" தனிநபர் சுதந்திரம் பாதுகாக்கப்படும் விந்தையே விந்தை!

வெள்ளை முதலாளிகளின் சொத்துரிமையை பாதுகாக்கும் சர்க்கார், நமது தொழிலாளிகளின் உரிமையை எப்படி பாதுகாக்கிறதென்று பார்க்கலாம்.

வேலையிழந்த டிராம்வேத் தொழிலாளருக்கு எவ்வளவு நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்னும் பிரச்னையை, ஒரு தொழில் கோர்ட்டிற்கு விட 1953 ஏப்ரல் மாதம் ராஜாஜி மந்திரிசபை உத்தரவிட்டது. தொழிலாளரின் ஆத்திரத்தை தணிக்க, இதாவது செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

### சென்னை சர்க்கார் மவுனம்

விசாரணைக் கோர்ட்டின் தீர்ப்பில் தொழிலாளருக்கு நஷ்டஈடு கொடுக்கவேண்டுமென்று தீர்ப்பு செய்யப்பட்டது. மேற்படி நஷ்டஈடு கொடுப்பதற்காக, டிராம்வே கம்பெனியின் ரிசர்வ் நிதியில் பாதி ஒதுக்கப்படவேண்டுமென்றும் அந்த தொழில் கோர்ட்டு தீர்ப்பில் கண்டிருக்கிறது இது அமுல் நடத்தப்பட்டால் தொழிலாளர்களுக்கு சுமார் மூன்று லட்சம் ரூபாய் நஷ்டஈடாக கிடைக்கும்: இந்த தீர்ப்பு அளித்து ஒரு வருடத்திற்கு மேலாகிவிட்டது. கோர்ட்டு தீர்ப்புப்படி பணத்தை வசூல்செய்து கொடுக்கவேண்டியது நமது ராஜ்ய சர்க்காரின் கடமை. ராஜாஜி மந்திரிசபையோ, அல்லது காமராஜ் மந்திரிசபையோ இந்தத் தொகையை வசூலித்துக் கொடுக்க எந்தவித நடவடிக்கையும் எடுக்காததேனோ?

### முதலாளிக்கு ஆதரவாக மத்திய சர்க்கார்

விஷயம் இதோடு நிற்கவில்லை. நஷ்டஈடு கொடுக்கும் தீர்ப்பை எதிர்த்து, அப்பீல் போடப்பட்டிருக்கிறது. இந்த அப்பீலை யார் போட்டிருக்கிறார்களென்று நினைக்கிறீர்கள்? டிராம்வே கம்பெனியின் வெள்ளைக்கார நிர்வாகம் போட்டிருக்குமென்று நினைப்பீர்கள். அதில் ஆச்சரியம் இல்லை. ஆனால் அப்பீல் போட்டிருப்பது மத்திய சர்க்கார்! அந்த அப்பீலில் கண்டிருக்கும் காரணங்கள் சில:

—நஷ்டஈடாக கொடுக்கப்பட்டுள்ள தொகை மிக அதிகமானது, நியாயமற்றது.

—ரிசர்வ் நிதியிலிருந்து நஷ்டஈடு கொடுக்கவேண்டுமென்னும் கொள்கை சட்டவிரோதம்.

—இந்தத் தீர்ப்பின் கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டால், மூலதன அமைப்பிற்கே பாதகம் ஏற்படும்—தொழில் வளர்ச்சியையே பாதித்துவிடும்.

டிராம் ஓட்டவும் முட்டுக்கட்டை. தொழிலாளருக்கு நஷ்டஈடு கொடுக்கவும் முட்டுக்கட்டை. நமது "க்ஷேமாபிவிருத்தி சர்க்கார், தொழிலைப் பாதுகாக்கும் லக்ஷணமும் தொழிலாளர்களைப் பாதுகாக்கும் லட்சணமும் இதுதான்.

டிராம் போன்ற அத்தியாவசிய தொழிலைப்பற்றியோ, தொழிலாளரைப்பற்றியோ கிஞ்சிற்றேனும் அக்கறை கொள்வோர் இவ்விதப் போக்கில் போவார்களா?

# கான்பூர் வழி காட்டுகிறது!

## இந்திய தொழிலாளி வர்க்கமே செல் அத்திசையில்!

அதோ! கான்பூர் வழிகாட்டுகிறது, இந்தியா முழுவதுமுள்ள தொழிலாளிவர்க்கம் எந்தப் பாதையில் அடியெடுத்துவைக்கவேண்டுமென்பதற்கு கான்பூர் பஞ்சாலைத் தொழிலாளர்கள் 46,000 (நாற்பத்தாறுயிரம்) பேரும் வழிகாட்டுகிறார்கள்.

இங்கேயே, இப்பொழுதே ஸ்தாபனரீதியில் தொழிற்சங்க ஒற்றுமையைக் கட்டமுடியும் என்ற நம்பிக்கையை நடைமுறையில் ஊட்டியிருக்கிறது.

நம் நாட்டிலுள்ள தொழிற்சாலை நகரங்களிலும் சரி, அகில இந்தியரீதியிலும் சரி, பல்வேறு ஸ்தாபனங்களில் பிரிவுபட்டிருக்கும். தொழிலாளர்கள் அனைவரையும் ஒரே மத்திய ஸ்தாபனத்தில் சேர்க்கமுடியும் என்ற மகத்தான நம்பிக்கையை கான்பூர் தொழிலாளிவர்க்கம் ஊட்டியிருக்கிறது.

### 6 சங்கங்களிலே பிளவுபட்டுக் கிடந்தனர்

கான்பூர் பஞ்சாலைத் தொழிலாளர்கள், 6 சங்கங்களிலே பிரிவுபட்டுக் கிடந்தார்கள். ஏ. ஐ. டி. யு. ஸி. என்றும், ஐ. என். டி. யு. ஸி. என்றும், பிரஜா சோஷலிஸ்ட் தலைமையில் 3 சங்கங்களும், சுயேச்சையாக ஒரு சங்கமும்...இவ்வாறாக 6 சங்கங்கள் இருந்தன.

இதனால் தொழிலாளிவர்க்கம் பொதுவான பிரச்னைகளில் ஒன்றுபட்டுக் குரல் எழுப்பவோ, நடவடிக்கையில் இறங்கவோ முடியாதிருந்தது. அதன் விளைவாக தொழிலாளர்களிடையே சோர்வு ஏற்பட்டது. எத்தனையோ தோல்விகளுக்கும் இரையானார்கள்.

### 10 ஆயிரம் பேரை ஆள்குறைப்புசெய்ய சதி

இந்தச் சமயத்தில் கான்பூர் முதலாளிகள், பத்தாயிரம் தொழிலாளர்களை ஆள்குறைப்பு செய்யவும், வேலைப்பளுவைத் திணிக்கவும், போனஸ் பணத்தை ஏப்பமிடவும் திட்டமிட்டார்கள்.

முதலாளிகளின் இந்த தாக்குதலுக்கு முன்னே மானங்கெட்டுத் தலைவணங்கி, வாழ்வுகெட்டு வாதைப்படுவதா? அல்லது ஒரு தாய் மக்களைபோல் திரண்டெழுந்து, போர்புரிந்து முதலாளிகளும் சர்க்காரும் செய்யும் சதிகளை முறியடித்து வாகைமாலை சூடுவதா? என்ற கேள்விகள் ஒவ்வொரு சங்கத் தலைவர்கள் முன்னும் ஊழியர்கள் முன்னும் கேட்கப்பட்டன.

தலைவர்கள் பலர் ஆகாயத்தையும் பூமியையும் பார்த்துக்கொண்டு ஊசலாடின போதிலுங்கூட, மில் கமிட்டிகளில் அங்கம் வகிக்கும் தீவிர ஊழியர்கள் இடைவிடாது முயற்சி செய்தார்கள்.

கடந்த 8 ஆண்டுகளாக பல சங்கங்களில் பிரிவுபட்டுக் கிடந்ததினால் ஏற்பட்ட கேடுகளை நடைமுறையில் அனுபவித்து படிப்பினைகளைப் பெற்ற தொழிலாளி மக்கள் தங்கள் ஊழியர்களின் ஒற்றுமை முயற்சிக்கு ஆசி கூறினார்கள்; ஆதரவும் தந்தார்கள்.

அவ்வளவுதான்! ஒரு தொழிலுக்கு ஒரே சங்கம் என்ற கோஷமானது ஒவ்வொருவரின் உயிர் முழக்கமாயிற்று. அதன் விளைவாக 6 சங்கத் தலைவர்களும் நிர்வாகிகளும் கூடினார்கள்.

### ஒரே சங்கமாயிற்று

6 சங்கங்களும் ஒரே சங்கமாக அமைப்பதென தீர்மானித்தனர்.

250 பேர் கொண்ட பொதுச் சபை தேர்ந்தெடுக்கப்பட்டது. 6 சங்கத் தலைவர்களும் தலைமைக் குழுவாகவும் அவர்கள் ஒருவர்பின் ஒருவராக சங்கத் தலைவராக இருப்பாரென்றும், 5 பொதுக்காரியதரிசிகளும், 5 உதவிக்காரியதரிசிகளும் இருக்கவேண்டுமென்றும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டது.

### சுரண்டும் கூட்டம் மிரண்டு கிடக்கிறது

உணர்வு பூர்வமாக எழுப்பப்பட்டுள்ள இந்த ஒற்றுமைக் கோட்டையைக் கண்டு, உத்தரப்பிரதேஷ் தொழில் மந்திரி சம்பூர்ணானந்தா திகைக்கிறார். ஊசலாடும் தலைவர்களைக் கையில் போட்டுக்கொண்டு, அவர்கள் தலைமை வகிக்கும் சங்கமே உண்மையான சங்கமென்று தம்பட்டமடித்து, முதலாளிகளின் ஆள்குறைப்புச் சாக்கை தொழிலாளிகளிடம் விற்றுவிடலாமென்று ஆசைக் கனவு கண்டார் மந்திரி சம்பூர்ணானந்தா ஆனால், ஒரே சங்கமானோம் என்ற உரத்த குரல் கேட்டு மந்திரியின் கனவு கலைந்தது. மூளை கிறுகிறுத்துவிட்டது.

### வெற்றிமேல் வெற்றி

ஒற்றுமையின் காரணமாக, சமீபத்தில் பல மில்களில் ஏற்பட்ட ஆள்குறைப்புகள், பழிவாங்கல்கள், ஷிப்ட் மாற்றங்கள் அத்தனையையும் ஒன்றுபட்டு முறியடித்திருக்கிறார்கள் தொழிலாளர்கள். தொழிலாளர்களின் ஐக்கிய பலத்தைக் கண்டதும், ஆள் குறைப்பு திட்டத்தை சர்க்காரின் உத்தரவின்றி அமுல் நடத்தக் கூடாதென்று சர்க்கார் தடை செய்துவிட்டார்கள்.

கல்கத்தாவில் 10-5-54ல் கூடிய அ. இ. தொழிற்சங்க மகாநாடு விடுத்த ஒற்றுமை வேண்டுகோள் வீண்போகவில்லை. பிளவு சக்திகள் மீது, ஒற்றுமை சக்திகள் நிச்சயம் வெற்றி கொள்ளும்.

ஹிந்த் மஸ்தூர் சபா, ஐ.என்.டி.யு.ஸி., ஐக்கிய தொழிற்சங்க காங்கிரஸ் ஆகியவைகளின் தலைவர்களெல்லாம், ஊழியர்களெல்லாம் கான்பூர் பாதையை வழிகாட்டியாகக் கொண்டு அகில இந்திய ரீதியில் ஒரே மத்திய ஸ்தாபனம் ஏற்படுத்தவும், ஒவ்வொரு ஊரிலும் ஒரே சங்கமாக அமையவும் வேண்டிய முயற்சியில் இறங்குமாறு அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் வேண்டுகோள் விட்டிருக்கிறது.

# விவசாயத் தொழிலாளருக்கு

## வேலை தர முடியாதென

### மிராசுதார்கள் மிரட்டல்

பரம்பரையாகத் தொடர்ந்து வேலை செய்து வந்த விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க இவ்வருடம் மறுத்துவிட்டு, ஏராளமான கூலிகளை வெளியிடங்களிலிருந்து மிராசுதார்கள் இறக்குமதி செய்யும் அக்கிரமம் தஞ்சை ஜில்லாவின் பல பாகங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

நன்னிலம் தாலுக்கா செம்மங்குடி, புளிச்சக்காடி, பெரும்பண்ணையூர் அபிவிருத்தீஸ்வரம் முதலிய கிராமங்களிலுள்ள மிராசுதார்கள் 300க்கு மேற்பட்ட ஹரிஜன விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க முடியாதென மறுத்து பழிவாங்கியிருக்கிறார்கள்.

விவசாய சங்க ஊழியர்கள் பன்முறை மிராசுதார்களை அணுகிக் கேட்டுப் பார்த்தும் பயனில்லை. அத்துடன், பக்கத்து கிராமங்களுக்கு வேலைக்குச் சென்றாலும், வேலை கொடுக்கக் கூடாதென்று மிராசுதார்கள் அந்தக் கிராமங்களுக்கும் செய்தி அனுப்புகிறார்கள். விவசாய வேலைகள் தீவிரமாக நடக்கவேண்டிய இந்நேரத்தில் சாகுபடிக்குத் தடங்கலை ஏற்படுத்தி மிராசுதார்கள் குந்தகம் விளைவிக்கிறார்கள். இதனால் உற்பத்தி பாதிக்கப்படும் அபாய மேற்பட்டிருக்கிறது.

மிராசுதார்கள் ஏராளமான அடியாட்களைக் கொண்டுவந்து, விவசாயிகளை அடிப்பதாகவும் வெட்டி விடுவதாகவும் மிரட்டி பயமுறுத்துகிறார்கள்.

விவசாயிகளுக்கு ஆத்திரமூட்டி கலவரம் விளைவிக்கும் எல்லா நடவடிக்கைகளிலும் மிராசுதார்கள் பகிரங்கமாக இறங்கியிருக்கிறார்கள். புளிச்சக்காடி, செம்மங்குடி போன்ற கிராமங்களில் விசேஷ ஆயுதப் போலீஸ் படை கிறுத்தப்பட்டிருந்தும் பயங்கரமான ஆயுதங்களுடன் நடமாடும் ரௌடிக் கூட்டங்கள் மீது எந்த கைய நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை

மிராசுதார்களின் மனிதத் தன்மையற்ற இந்த அக்கிரமமுறைகளினால் நூற்றுக் கணக்கான குடும்பங்கள் வேலையில்லாமல் பட்டினி கிடக்கும் மோசமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதில் உடனடியாக சர்க்கார் தலையிட்டு மிராசுதார்களின் கொட்டத்தை அடக்க முன்வரவேண்டும். விவசாயத் தொழிலாளர்களைப் பழி வாங்கக் கூடாது என்று உத்திரவிட வேண்டும்.

காகை தாலூக்கா கீவளூர் ரேஞ்ச நாகத்தூர் கிராமத்து விவசாயிகள் அவ்வூர் மிராசுதார்களிடம் தினக்கூலி இரண்டு மரக்கால் வேண்டுமென நியாயமாகக் கேட்டனர். இதனால் பூரா விவசாயத் தொழிலாளர்களையும் பழிவாங்கும் நோக்கமுடன் யாருக்கும் வேலையே கொடுக்க முடியாதென மறுத்துவிட்டு, வெளியூர் கூலி ஆட்களைக் கொண்டு விவசாய வேலைகள் செய்ய முற்பட்டிருக்கிறார்கள். குதிரை கீழே தள்ளியதுமல்லாமல் குழிவேறு பறித்ததாம் என்பதைப்போல, விவசாயிகளைப் பழி வாங்கியதுமல்லாமல் அவர்கள்மீது பொய்யான புகார்களைப் போலீசுக்கு வேறு அனுப்பியிருக்கிறார்கள். உண்மை நிலைமையைப் போலீஸ் அதிகாரிகளாவது தீர விசாரித்துத் தெரிந்துகொண்டார்களா? அதுதான் இல்லை. மிராசுதார்கள் கூறியதை வேதவாக்காகக் கொண்டு, நியாயக்கூலி கேட்ட 7 விவசாயிகளைக் கைது செய்திருக்கிறார்கள். போலீஸ் மந்திரி காமராஜர் ஏழை பங்காளரல்லவா? அவருடைய ஆட்சியில் நடைபெறும் தர்ம நியாயம் இதுதான்!

### 16 கோம்பை விவசாயிகள் கைது

மதுரை ஜில்லா கோம்பைக்கு அருகிலுள்ள மலையில் தரிசு நிலங்களை நிலமில்லாத விவசாயிகள் சுமார் 300 பேர்கள் (1500 ஏக்கர் நிலத்தைப்) பண்படுத்தி நெல், கேழ்வரகு, தினை முதலிய உணவுப் பொருள்களை விவசாயம் செய்து வருகின்றனர். இந்த விவசாயிகள் கோம்பை, உத்தமபாளையம், அனுமந்தம்பட்டி, புதுப்பட்டி முதலிய கிராமங்களைச் சேர்ந்தவர்களாகும். தரிசுநிலம் சாகுபடி செய்வதைப் பற்றி, ஆவனசெய்வதாக மதுரை ஜில்லா கலெக்டர் உறுதி கூறியிருந்தார்.

ஆனால் இந்நிலையில் காட்டிலாகா அதிகாரிகளும், போலீசாரும் அநியாய நடவடிக்கையில் இறங்கி 10-8-54ம் தேதியன்று, தரிசுநிலத்தைப் பயிரிட்ட 16 விவசாயிகளைக் கைதுசெய்து, உடனே தலா ஒரு மாதம் தண்டனை கொடுத்து மதுரை சிறைக்கு அனுப்பிவிட்டார்கள்.

இத்தகைய அடக்குமுறை சலசலப்பிற்கு விவசாய மக்கள் அஞ்சிப் பணியமாட்டார்கள். எவ்விதத்திலும் தரிசு நிலத்தை அடைந்தே தீருவோம் என்று முன்னிலும் அதிக உறுதிகொண்டுள்ளார்கள்.

## சென்னையில் நிரந்தர லேபர் கமிட்டி முடிவுகள்

இம்மாதம் 11, 12ந் தேதிகளில் ராஜாஜி ஹாலில் வி. வி. கிரி தலைமையில் இந்திய சர்க்காரின் நிரந்தர லேபர் கமிட்டியின் 14வது கூட்டம் நடைபெற்றது. இதன் விபரம் 12, 13ந் தேதி தினசரிப் பத்திரிகைகளில் (குறிப்பாக ஹிந்து, மெயில், எக்ஸ்பிரஸில்) பிரசுரிக்கப்பட்டுள்ளது. அதன் சுருக்கத்தையே இதில் கொடுக்கிறோம்.

மத்திய சர்க்காரின் மந்திரிகளான வி. வி. கிரி, அபிதலி ஜாபர்பாய், மாகாண சர்க்காரின் தொழில் மந்திரிகள், முதலாளிகள் சங்கப் பிரதிநிதிகள், தொழிலாளர் மத்திய சங்க பிரதிநிதிகளாக மொத்தம் சுமார் 40 பேர் கலந்து கொண்டனர். ஏ. ஐ. டி. யு. ஸி. சார்பில் எஸ். ஏ. டாங்கே, கே. டி. கே. தங்கமணியும், ஐ. என். டி. யு. ஸி. சார்பில் வாசவடா, அம்பேக்கர், ஜி. ராமானுஜம், பி. கே. நாயரும், ஹெச். எம். எஸ். சார்பில் கெட்கீக்கர், அந்தோணி பிள்ளையும், யு. டி. யு. ஸி. சார்பில் சதின் சக்ரவர்த்தி, ராமநாதனும் பங்கெடுத்தனர்.

### முடிவுகள்

1. டில்லியில் சென்ற வருடம் ஜூலை மாதம் நடைபெற்ற 13வது கமிட்டி கூட்ட முடிவுகள் தெரிவிக்கப்பட்டன. (அம்முடிவின் அடிப்படையில் தான் ஆள் குறைப்பு பற்றிய நஷ்டஈடு, வேலை கொடுக்கப்படாத காலத்து நிவாரணம் பற்றிய ஷரத்து தொழில் தகராறு சட்டத்தில் சேர்க்கப்பட்டது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம்.)

2. தினசரி கூலிகள், பீஸ் ரேட் வேலை செய்பவர்கட்கு, ஓவர் டயம் பற்றியும் வார ரேட் முறை பற்றியும் பாக்டரி சட்ட ஷரத்து அமுலாக்கக் கூடாதென்ற ஆலோசனை நிராகரிக்கப்பட்டது.

3. குறைந்த பட்ச சம்பளச் சட்டப்படி சம்பளம் நிர்ணயித்தால், தொழில் தகராறு சட்டப்படி அதை கேட்கக் கூடாதென்ற ஆலோசனை நிராகரிக்கப்பட்டது.

4. மத்திய பிரதேசம், ஒரிஸாவிலுள்ள 70,000 மாங்கனிஸ் தொழிலாளர்களுக்காக ஓர்விசேஷ தொழில் கோர்ட்டு நியமிக்கப்பட்டுள்ளது. அதை துரிதமாக நடத்தவும் வேறு சில கோரிக்கைகளை சேர்க்கவும் முடிவு செய்யப்பட்டது.

5. பாங்கு சிப்பந்திகள் தீர்ப்புப் பற்றியும் தொழில் அப்பீல் கோர்ட் பற்றியும் பேசப்பட்டது.

6. தொழிலாளர்கட்கு வெல்பேர் நிதி சம்பந்தமான சட்டம் இயற்றுவது பற்றி பேசப்பட்டது. பம்பாயில் இம்மாதிரி சட்டம் இயற்றப்பட்டுள்ளது. அது சுப்ரீம் கோர்ட் முன் உள்ளது. அடுத்த (அதாவது 14வது) இந்திய தொழிலாளர் மகாநாட்டில் முடிவு செய்யப்படும்.

7. கட்டிடத் தொழிலாளர்கள் நிலைமை பற்றி—தனிப்பட்டோர், காண்ட்ராக்ட், சொசைடி, மாகாண சர்க்கார், ரயில்வே, மத்ய சர்க்கார் நடத்துவது—14வது இந்திய தொழிலாளர் மகாநாட்டில் முடிவு செய்யப்படும்.

8. ஐ. எல். ஓ. கன்வென்ஷன் பற்றி சப் கமிட்டி சிபார்சு ஒத்துக் கொள்ளப்பட்டது. கட்டாயமாக சம்பளமின்றி வேலை வாங்குவது பற்றிய கன்வென்ஷன் பற்றி ஒத்துக் கொள்ளப்பட்டது. ஆண் பெண் சம சம்பளம் படிப்படியாக கொண்டு வர ஏற்பாடுகள் செய்யப்படும்.

## அமெரிக்க அதிகாரிக்குக் கல்தா! நிறவெறி அம்பலமாயிற்று

உள்ளதைச் சொன்னால் உடம்பெரிச்சல் என்பது பழமொழி. அதோடு நண்பர் - கூட்டாளி - பக்தர் என்று எண்ணியிருந்த ஒருவரே குட்டை உடைக்கக் கிளம்பிவிட்டால் கோபம் தலைகால் தெரியாமல் போகுமல்லவா? இலங்கையில் அண்மையிலே நடைபெற்ற ஒரு சம்பவம் இக்கூற்றை மெய்ப்பிக்கும் முறையிலே அமைந்திருக்கிறது.

இலங்கையிலிருந்து வெளியிடப்படும் பிரபல ஆங்கில தினசரிகளில் ஒன்று 'சிலோன் அப்ஸர்வர்' அமெரிக்கப் பண்பாட்டுக்கு அது எத்தனையோ ஆலோலங்கள் பாடியுள்ளது. டாலர் ஜனநாயகந்தான் சுத்த சுயம்பிரகாசமானது என்று சத்தியம் செய்திருக்கிறது. இலங்கையின் முன்னேற்றம் அமெரிக்காவுடன் சார்ந்து நிற்பதில்தான் இருக்கிறதென்று அப்பட்டமாக அறைகூவியிருக்கிறது.

இத்தகைய தொண்டரடிப் பொடியாழ்வாரின் காரியாலயத்திலிருந்து அமெரிக்க ஸ்தானிகராலய பிரமுகர்—பிரசாரப்பகுதி தலைவர்-வெளியே போ! என்று கல்தாக் கொடுக்கப்பட்டிருக்கிறார். ஏன்?

அமெரிக்காவில் நிறத்திமிர் பிடித்த வெள்ளையர் நீக்ரோ மக்களை அடக்கி ஒடுக்கி வருவதைக் களமாகக்கொண்டு பிரபலபிரெஞ்சு எழுத்தாளரான ஜீன்பால் ஸார்த்ரே எழுதியுள்ள "கௌரவமுள்ள வேசை" என்ற பிரெஞ்சுப் படம் இலங்கைக்கு வந்திருக்கிறது. சினிமா தணிக்கையாளர் அமெரிக்க ஸ்தானிகாலயத்தின் நிர்ப்பந்தத்தின் விளைவாக இதைக் காட்ட கூடாது என்று தடை செய்திருக்கின்றனர்.

நீக்ரோ-வெள்ளைக்காரர் என்ற வேற்றுமை பாராட்டாத ஒரு வேசிதான் இப்படத்தின் கதாநாயகி. கொலை செய்து அக்குற்றத்தை நிரபராதியான வேறு ஒரு நீக்ரோ மீது சுமத்துகிறான் இதற்கான சாக்ஷியங்களைத் திரட்டும் முறையில் இந்த வேசியைப் பெரிய மனிதர்கள் பேட்டி காண்கிறார்கள். நீக்ரோவுக்கு விரோதமாக சாட்சி சொன்னால் அதற்கு 'வெகுமதி'யாக சமூகத்தில் கௌரவ ஸ்மாட்டியாக அவளை மறுமலர்ச்சி பெற வைப்பதாக வாக்களிக்கின்றனர். இதுவே கதையின் உள்ளடக்கம்.

அமெரிக்க ஸ்தானிகராலயத்தின் வற்புறுத்தலால்தான் இப்படம் தணிக்கை செய்யப்பட்டது என்று இலங்கைப் பார்லிமெண்டில் பிரச்னை எழும்பியது. இந்தச் செய்தியை பிரசுரித்த அப்சர்வர் பத்திரிகை நீக்ரோ வேட்டையாடும் க்ளுகிளக்ஸ்கிளான் என்ற பாஸிஸ்ட் வெறிக் கூட்டத்தைப் பற்றிய ஒரு கட்டுரையையும் பிரசுரித்திருந்தது.

இதைக் காணப் பொறுக்காமல் தான் பிரசாரப் பகுதி அதிகாரி அப்சர்வர் காரியாலயத்திற்கு வந்தார் பேச்சில் சூடேறியது. பத்திரிகையின் விவகாரத்தில் தலையிடுவது ஏல்ல தல்ல என்று ஆசிரியர் எச்சரித்தார். அதையும் சட்டை செய்யாது அத்து மீறிப் பேசியதால் கல்தாக் கிடைத்தது அதிகாரிக்கு.

அமெரிக்க அதிகாரி வெளியேற்றப்பட்டதாக சிறு செய்தி மட்டும் பிரசுரித்திருந்த தினமணி முதலிய உள்ளூர் பத்திரிகைகள் இந்த உண்மைகளை எல்லாம் இருட்டடிப்புச் செய்துவிட்டன.

# திரை உலகம்

# ரத்தபாசம்

சிறுவனாக இருந்த காலத்தில் தன் அண்ணன் ரகுவால் தகப்பன் பெட்டியில் திருடும்படி தூண்டப்பட்டான் ராஜா அண்ணன் காட்டிக்கொடுத்ததாலேயே தகப்பனின் கோபக்கனலுக்கு இரையாகி வீட்டிலிருந்து துரத்தப்படுகிறான்.

ஒரு நாடோடி, பிக்பாக்கெட்காரனாக பம்பாயில் சுற்றுகிறான்.

இந்த நாடோடிக்கு மற்றொரு நாடோடியான நாட்டியம் ஆடிப் பிழைத்த ராணி என்ற பெண் காதலியானாள். நாடோடியானாலும் அவனுக்கு நல்ல இருதயமுண்டு. நேர்மையுண்டு. ஒருவனைக் காதலித்தால் அவனுடனேயே வாழவேண்டுமென்ற சீரிய பண்புண்டு

இதே குணங்களைத்தான் ராஜாவிடம் கண்டாள் ராணி. அவனது அஞ்சாநெஞ்சும், மெலிந்தோர்க்குக் காட்டும் பரிவும் அவளது இருதயத்தை கொள்ளைகொண்டன. என்றாலும் திருடனாயிற்றே! பிழைப்பதற்காக சரியான வாழ்க்கைப் போராட்டம் நடத்தத் தெரியாத குருடரின் இழிசெயல் அல்லவா திருட்டு? கூடாது! எவ்விதமாயினும் ராஜாவைத் திருத்தியே ஆகணும்! என்பது ராணியின் சபதம். முடிவில் அவளது சபதமும் நிறைவேறுகிறது.

இது ஒருபுறத்தில்! மறுபுறத்தில் ராஜாவை இளமையில் வஞ்சித்த அண்ணன் சென்னையில் பெரிய சைக்கிள் கம்பெனி ஒன்றின் முதலாளி. அவனுக்கு பம்பாயிலும் தொழில் உண்டு. கேடுகெட்ட முதலாளித்துவ நாகரீகத்தின் பிரதிநிதி அவன். பம்பாயில் தனது கம்பெனி மானேஜரின் சூழ்ச்சிக்கு இரையாகி சென்னையிலிருந்த மனைவியையும் மறந்து மானத்தை விற்றுப் பிழைக்கும் அந்த மானேஜரின் 'காதலி'யுடன் காலந்தள்ளுகிறான்.

இதைத் தெரிந்துகொண்டு அண்ணனையும் அண்ணியையும் சேர்த்துவைக்க முயலுகிறான் ராஜா.

மானேஜரும் காதலி மனோரமாவும், காமப்பித்துப் பிடித்த ரகுவிடம் அவனது தம்பியின் காதலியான ராணியை இழுத்துவந்துவிட்டுவிட்டு, ரகுவின் சொத்தெல்லாம் சுருட்டிக்கொண்டு ஓடிவிடுகின்றனர்.

ரகு தனது தம்பியின் காதலி ராணியை பலவந்தப்படுத்தும்போது, தம்பி ராஜா அவனைச் சுட்டுக்கொல்லத் துணிகிறான். ஆனால் அவனது அண்ணியின் பரிதாபக் குரலுக்கு இரங்கி உயிர்ப்பிச்சை அளிக்கிறான். இதுதான் கதை.

## குறிக்கோள்

சந்தர்ப்பந்தான் ஒருவனைத் திருடனாக்கியது! அவனைத் திருத்த முடியும். ஏழை எளிய மக்களிடையே நற்குணமும், நேர்மையும், அன்பும், தயாளகுணமும் இயற்கையாகவே உள்ளன. ஆனால் பிறரைச் சுரண்டிப் பிழைக்கும் 'சீமான்கள்' அற்பத்தனமான போக்குடையவர். போலிக் கவுரவமும், கட்டிய மனைவியை நட்டாற்றில் விட்டுவிட்டு காமப்பேய் கொண்டலையும் கிராதக குணமுடையவர்! என்ற கருத்துக்களை சித்தரிக்க முனைந்துள்ளனர் டி.கே.எஸ்- சகோதரர்கள். மேலும் தானாடாவிட்டாலும் தன் சதையாடும் என்ற அண்ணன் தம்பி பாசத்தையும் எடுத்துக்காட்டி இக்கதையையும் படத்தையும் வெற்றிகரமாக, நல்ல முறையில் தயாரித்துள்ளனர் டி. கே. எஸ். சகோதரர்கள்.

## நடிப்பு

பரவாயில்லை என்று சொல்லக் கூடிய விதத்தில் மனிதன், இன்ஸ்பெக்டர் ஆகிய படங்களில் நடித்த திரு. ஷண்முகம், இதில் மிக உயர்ந்த சினிமா நடிகர் என்பதை ஊர்ஜிதம் செய்துவிட்டார். பிக்பாக்கெட்காரனாக மின்னல் வேகத்தில் அவர் புரியும் சாகஸங்கள், பிச்சைவாங்க காதலியுடன் நாட்டியமாடும் எழில், அண்ணனுடைய அயோக்கியத்தனங்களை ஆவேசத்துடன், அதே சமயம் ஆணித்தரமாக அடித்துக் கூறும் கட்டங்கள் வெகுஜோர்.

அடுத்தது அஞ்சலிதேவியின் நடிப்பு. தனக்குக் கொடுக்கப்படும் கதாபாத்திரத்தை உணர்ந்து அதனுடன் லயித்து நடிக்கும் நடிகைகளில் சிறந்தவர் அவர் என்றால் மிகையாகாது. கடுமையான வார்த்தைகள், அதே சமயத்தில் கனிவு உள்ளம் கொண்ட நாடோடிப் பெண்ணாக அவர் நடிப்பது இயற்கையாக உள்ளது.

**பணமிருக்கிற மனுஷங்கிட்டே நல்ல**
**குணமில்லே**
**மனமிருக்கிற மனுஷங்கிட்ட பணமில்லே**
**பாடுபடும் உழவனுக்கு நிலமில்லே—காணி**
**நிலமில்லே!**
**தேடிவைச்ச சீமான் விலையலே!**
**உலகம் போர போக்கு சரியில்லே இதை**
**ஒழுங்கு பண்ணி அமைச்சுகிட்டா**
**அறிவில்லே**

என்ற பாட்டும் அதை அபிநயத்துடன் அஞ்சலிதேவி ஆடும் நடனமும் தமிழ் திரைப்பட உலகில் ஒரு புதுமை என்றே கூறலாம்.

திரு. பகவதியின் நடிப்பு பரவாயில்லை. மேல்வர்க்கக் கனதனவானின் கீழ்த்தர செயல்களை இன்னும் கொஞ்சம் வேகத்துடன் சித்தரிப்பது அவசியம்.

படப் பிடிப்பும் ஒலிப் பதிவும் நல்ல முறையிலுள்ளது. பாட்டுகள் அற்புதமாகவுள்ளன.

## வசனம்

அர்த்தமற்ற அடுக்குச் சொற்களில் ஐந்து பத்து நிமிஷம் வரை ஒருவரே பிரசங்கமடித்துக்கொண்டிருக்கும் சிலரின் வசனம்போலல்லாது, இனிமையான தமிழில், சுருங்கச் சொல்லி, கேட்போரின் மனதை கவரும் விதத்திலுள்ளது திரு. ஸ்ரீதர் அவர்களின் வசனம்.

படத்தில் ஒரு குறை. கடைசி ஸீன் திடீரென்று முடிவதுபோல் உள்ளது. எதிரும் புதிருமாக உள்ள அண்ணன் தம்பிகள் க்ஷணத்தில் கோபம் தணிந்து தழுவிக்கொள்வது அவ்வளவு இயற்கையாக இல்லை. இன்னும் சில சாதகமான சம்பவங்களுக்கு பிறகு அந்த நிலைமையை உருவாக்கி இருக்க வேண்டும்.

என்றாலும் சமீபத்தில் வந்த படங்களில் மிகச் சிறந்தது 'ரத்த பாசம்' என்றால் மிகையாது.

—விமர்சகன்.

★

# துளி விஷம்

சமாதானத்துக்காகவும் தமிழகத்தின் ஒற்றுமைக்காகவும் பாடுபட வேண்டியதன் அவசியத்தை நடுமையமாகக்கொண்டு எடுக்கப்பட்ட முதல் தமிழ்படம் "துளி விஷம்" என்ற முறையில், இதை நாம் வரவேற்கிறோம்; பாராட்டுகிறோம்.

## கதை

மலைநாட்டு மன்னன் மலையமான் அசந்திருந்த சமயம்பார்த்து ஆதிக்க வெறிபிடித்த நாகநாட்டரசன் வீர மார்த்தாண்டன் படையெடுத்து மலைநாட்டைப் பிடித்துக்கொண்டான்.

மலையமானும், அவன் மனைவி மகாதேவியும், குழந்தை சந்திரனும் தப்பிச்சென்று, தமிழ் முனிவர் ஜெயங்கொண்ட தேவரின் ஆசிரமத்தில் அடைக்கலம் புகுந்தனர். பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று மலையமான் ஆசிரமத்தை விட்டு வெளியேறினான்.

தமிழ்நாட்டில் சமாதானம் நிலவவேண்டுமென்று பாடுபடும் ஜெயங்கொண்ட தேவர், குழந்தை சந்திரனை வளர்த்து, வீரனுக்குத் தேவையான வித்தைகளைக் கற்பித்து நாகநாட்டரசன் வீரமார்த்தாண்டனிடம் சேனாதிபதியாக்குகிறார். சந்திரன் சேனாதிபதிமட்டுமல்ல! வீர மார்த்தாண்டனின் புதல்வி நாகவல்லிக்கு தமிழ் வாத்தியார்! காதலன்! கணவன்! இப்படி ஆக்கிவிடுகிறார் திரு. தேவர் அவர்கள்.

நாகவல்லியை மண முடிக்கவந்த கற்பகநாட்டு மன்னன் சூர்யகாந்தன், தளபதி சந்திரனை ஒழித்துக் கட்ட சதி செய்கிறான். சந்திரனை பகைவன் மலையமானின் கையாள் என்று கூறி, தூக்கு தண்டனை வாங்கிக்கொடுக்கிறான். மகனைக் காக்க, மலையமான் வீரமார்த்தாண்டனிடம் சரணடைகிறான். அவனுக்கு தூக்கு தண்டனை என்கிறான் வீர மார்த்தாண்டன். பிரிவாற்றாமையால் மகாதேவியும் நாகவல்லியும் விஷமுண்டு மாண்டு விட்டதாக தகவல் வருகிறது. சவ அடக்கத்தின்போது, முனிவர் உணர்ச்சிமிக்க பிரசங்கம் செய்கிறார். மன்னர்களின் மனம் மாறுகிறது. மாண்டோர் உண்டது விஷமல்ல. முனிவர் தந்த துளி விஷ மயக்க மருந்து. ஆதலால் முனிவர் தந்த மாற்று மருந்தினால் உயிரிழந்தோர் உயிர்பெற்றெழுந்தனர். அரசர்கள் ஒன்றுபட்டனர். பகை ஒழிந்தது. சமாதானம் வென்றது. இதுதான் கதை.

## கதை விமர்சனம்

பகையரசர்களின் மகனுக்கும் மகளுக்கும் முடிச்சுப் போட்டு விடுவதாலோ—அல்லது அரசர்களின் இதயத்துக்கு பெரியார்கள் வேண்டுகோள் விடுவதாலோ சமாதானத்தை நிலை நாட்ட முடியுமென்று நினைப்பது, முடியாத காரியம். மக்களின் நலனைப் புறக்கணித்துப் போரில் குதித்தால், வைரம் பதித்த தங்கக் கிரீடங்கள் தரையிலே உருண்டு உருண்டு சாக்கடையிலே விழுந்து மிதந்து செல்லும் என்பதை மக்கள் நிரூபிப்பதாகவும், அதற்கு பயந்து அரசர்கள் சமாதானத்துக்கு இணங்குவதாகவும் கதைப் போக்கு இருந்திருந்தால் நன்றாயிருக்கும். என்றாலும் சமாதானத்தை வலியுறுத்துகிற படம் என்ற முறையில் இதை தயாரித்த கே. எல். நரசு, சாண்டில்யனுடைய கதைக்கு நல்ல முறையில் வசனம் எழுதி டைரக்ட் செய்த ஏ. எஸ். ஏ. சாமி முதலியவர்களையும் பாராட்டுகிறோம்.

## நடிப்பு

சந்திரனாக நடிக்கும் கே. ஆர். ராமசாமி சொர்க்கவாசலில் நடித்ததைவிட, இதில் நன்றாக நடிக்கிறார். வில்லனாக வரும் சிவாஜி கணேசனின் நடிப்பும் நன்றாயிருக்கிறது. அரசர்களாக வரும் எஸ். வி ரங்காராவும், கிருஷ்ணமூர்த்தியும் நன்றாக நடித்தாலும், தெலுங்கர்களாயிருப்பதாலும் தமிழ் பேச முடியாமல் தத்தளிக்கிறார்கள். முனிவராக நடிக்கும் டி. வி. நாராயணசாமி சிறப்பாக நடிக்கிறார். பெண் நடிகர்களில் பி. கே சரஸ்வதிக்கு தான் முதல் பரிசு. அடுத்த பரிசு டி. கிருஷ்ணகுமாரிக்கு, எஸ். டி. சுப்புலக்ஷ்மியின் நடிப்பும் பொருத்தமாயிருக்கிறது. இதர நடிகர்களும் பரவாயில்லை. கே. பி. காமாட்சி சுந்தரனின் கருத்து மிக்க பாடல்களும் நன்றாயிருக்கிறது. இடி முழக்கங்களும், பேச்சுகளும் அடுக்கு மொழிகளும் அளவு மீறியிருப்பினும் கூட, பொதுவாக நல்ல படம் என்றே சொல்லலாம்.

ஐ. மா. பா.

# மதுரை கைநெசவு தொழிலாளர் முதல் மகாநாடு

பெரும் பெரும்புகழும்பெற்ற மதுரை நகர கைநெசவுத் தொழிலாளரின் முதலாவது மகாநாடு 8-8-54ல் திரு. என். கே. பழனிச்சாமி எம்.எல்.ஏ. தலைமையில் முனிச்சாலை ரோட்டுச் சிங்காரப் பந்தலில் வெகு சிறப்பாக நடைபெற்றது. நெசவாளர் சமூகப் பெருங்குடி மக்கள் 2000 பேர் மத்தியில் மதுரை கைநெசவுத் தொழிலாளர் சங்கம் என்ற வெண்ணிற எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட செங்நிறக் கொடியை தோழர் எஸ். ராமகிருஷ்ணன் ஏற்றிவைத்தார்.

## ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி

திருச்சி நெசவாளர் தலைவர் ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி மகாநாட்டைத் திறந்துவைத்துப் பேசுகையில், "கரும்பும் பருத்தியும் சகாய விலையில் பாரிக் கம்பெனிக்கும் ஹார்வி முதலாளிக்கும் கிடைக்கவேண்டுமென்பதற்காக, குறைந்த விலை நிர்ணயம் செய்யும் சர்க்கார், கைநெசவுத் தொழிலாளருக்கு குறைந்த விலையில் நூல் கிடைக்க, ஏன் ஏற்பாடு செய்யவில்லை? இதிலிருந்தே தெரியவில்லையா இந்த சர்க்கார் யார் பக்கமென்று!" என்று கேட்டார்.

## தலைவர் - என். கே. பழனிச்சாமி

அடுத்துப் பேசிய தலைவர், "கைநெசவாளர்களை ஆதரிக்க வேண்டுமென்று உண்மையிலேயே இந்த சர்க்காருக்கு ஆர்வமிருக்குமானால், பட்ஜெட்டில் 2 கோடி ரூபாய் நிவாரணமாக ஒதுக்கவேண்டும்" என்றார்.

பின்னர், மகாநாட்டுக்குவந்த ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப்பட்டன.

## கே. எஸ். பார்த்தசாரதி

தமிழ்நாடு கைத்தறி நெசவுத் தொழிலாளர் சம்மேளனக் காரியதரிசி பேசுகையில் "வாழப் பிறந்தோம், சாகமாட்டோம் என்று வீரகர்ஜனை புரிந்து, அருப்புக்கோட்டை, ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆகிய இடங்களிலிருந்து பட்டி பட்டியாக நடந்து சென்னை நோக்கிச் சென்று, கிளர்ச்சிசெய்து சிறைப்பட்டார்களே, அந்த வீரர்களின் தியாகத்தால்தான் கஞ்சித்தொட்டி திறக்கநேரிட்டதே தவிர, காங்கிரஸ் சர்க்காரின் கருணை உள்ளத்தால் அல்ல" என்றார். மற்றும் குறைந்த வட்டியில் கடன் கிடைக்க, சேல்ஸ் சொஸைட்டிகள் ஆங்காங்கு அமைக்கவேண்டுமே, மலிவான விலைக்கு சாயம் கிடைக்க, இறக்குமதி வரியை ரத்துசெய்யவேண்டுமென்று வற்புறுத்தினர்.

## நிர்வாகஸ்தர் தேர்தல்

சங்கத் தேர்தலில், இவ்வருடத் தலைவராக கே. ஆர். சுந்தரமனும், பொக்கிஷதாராக ஜே. கே நாகய்யனும், மற்றும் 18 பேர் கொண்ட நிர்வாகக் குழுவும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

மாலைப் பொதுக்கூட்டத்தில், தீர்மானங்களை விளக்கி தோழர்கள் எஸ். ராமகிருஷ்ணன், கே. என். பார்த்தசாரதி, ஏ. எஸ். கிருஷ்ணமூர்த்தி முதலியவர்கள் பேசினார்கள்.

சென்ற வாரம் வெளியான விவசாயிகள் மாநாட்டு போட்டோக்களை தயாரித்தது.

தோழர், என். சிவராஜ்
எம்.எல்.ஏ.,

# தியாகிகள் பேரால் காசுபறிக்கவா!

## 'பகத்சிங்' படம் சரித்திரப் புரட்டு

பாஞ்சால நாட்டின் தவப்புதல்வன், இந்திய இளைஞர் உள்ளத்திலே புரட்சிக் கனல் கொளுத்திய இணையற்ற வீரன், தாய்த் திருநாட்டின் விடுதலைக்காகத் தன் இன்னுயிரைத் தியாகம் செய்த அமரன் பகத்சிங்கின் நாமம் பார் உள்ளவரையில் கடல் நீர் உள்ளவரையில் கால காலமாகநிலைத்து நிற்கும். அவரது வாழ்க்கையைப் படமாகப் பிடித்திருக்கிறார்கள் பூனம் கம்பெனியார். ஷாஹிதே ஆஜாம் பகத்சிங் என்பது படத்தின் பெயர். கதை, டைரக்ஷன் எல்லாம் செய்தவர் ஜகதீஷ் கௌதாம் என்பவர். நாட்டு மக்கள் ஒருமுகமாக அஞ்சலி செலுத்தும் ஒப்பற்ற தேசாபிமானியின் வாழ்க்கை சித்தரிக்கப்படுவதை சகலரும் வரவேற்பது இயல்பே.

ஆனால் இப்படம் பகத்சிங்கின் வாழ்க்கையைப் படுமோசமாகச் சீர்குலைத்து, சரித்திரத்தைப் புரட்டி, இல்லாத சம்பவங்களைச் சேர்த்து ஜீவனில்லாத ஒரு மூன்றாந்தர ஸ்டண்ட்படமாக எடுக்கப்பட்டிருக்கிறது. இதைக் கண்டு நெஞ்சு குமுறிய பகத்சிங்கின் சகதோழர்கள் ஹிந்துஸ்தான் குடியரசுக் கழகத்தைச் சேர்ந்த சிவவர்மா அவரது அருஞ் சகோதரர் குல்தார் சிங் முதலியோர் தமது ஆட்சேபனையைத் தெரிவித்தோடு படத்தை தடைசெய்ய வேண்டும் என்றும் கோரியிருக்கிறார்கள்.

## காசுபறிக்கும் கதை

பகத்சிங்கும், சந்திரசேகர ஆஸாதும் வாழ்ந்தவர்கள்; வீரத்துடன் போராடியவர்கள்; லட்சியங்களுக்காக இடையறாது பாடுபட்டவர்கள்; விடுதலை இயக்கத்தில் புதியதோர் சகாப்தத்தைச் சிருஷ்டித்தவர்கள். அவர்கள் நாவல்களில் வரும் ஆடையலங்கார கதாநாயகர்களல்ல; காதல் சோகம் என்று கற்பனை கட்டங்களில் காசுக்குக் கூத்தாடுபவர்களல்ல.

எனவே யதார்த்த வாழ்வுக்குப் புறம்பாக போலி சம்பவங்களைப் புகுத்தி காசு பறிக்கும் கதையாக எழுதி இப்படம் எடுக்கப்பட்டிருக்கிறது. தலைசிறந்த தியாகிகளை கேவலப்படுத்தும் போக்கு இது; சரித்திரத்தைப் புரட்டிச் சிதைக்கும் சதி இது.

பகத் சிங்கும் அவரது தோழர்களும் அரசியல் லட்சியங்களுக்காக வாழ்ந்தார்கள்; அவற்றை சாதிப்பதற்காக நடந்த போராட்டங்களில் சாய்ந்தார்கள். லட்சியமின்றேல் அவர்களுக்கு வாழ்க்கை இல்லை. உறங்கிக்கிடந்து நாட்டை உத்வேகமூட்டி எழுப்பவே புரட்சிகரச் செயல்களில் ஈடுபட்டார்கள். அன்னியர் நாடு அந்நிய ஏகாதிபத்தியத்திற்கு அடிமைப்பட்டுக்கிடக்கிறதே—இந்த அவலநிலை அகல வேண்டுமே என்று ஆவேசத்தால் ஆர்த்தெழுந்தார்கள். அவர்களது வீரச் செயல்களின் வரலாறு இன்று மக்களின் பொதுவுடைமையாகிவிட்டது. அவர்களது புனிதப் பெயர்களைக் கேட்டும்போதே புது வேகம் பிறக்கிறது.

## தடை செய்க

இத்தகைய உத்தமமான வரலாறுகளை ஒதுக்கித்தள்ளி 'ராபின் ஹுட்' போல ஓடுதல் ஆடுதல்—தப்புதல்—சண்டையிடல் என்று வெறும் கோமாளித் தனமாகப் படம் எடுக்கப்பட்டிருக்கிறது. மாதர் குலத்திடம் மகத்தான மதிப்பு வைத்திருந்த பகத் சிங் மாதரைச் சந்தேகிக்கும் பேர்வழியாகக் காட்டப்படுகிறார். கடவுள் நம்பிக்கை லவலேசமும் இல்லாத பகத்சிங் கடவுளின் சார்பாக வாதாடுவதாகச் சித்தரிக்கப்படுகிறார். வாழ்வு முழுவதும் தியாக நெருப்பாற்றில் நீந்தி மயிர் கூச்செரியச் செய்யும் வீர சாகசங்களை விளைத்த இந்த வீரர்களின் வாழ்க்கை இத்தனை படுமோசமாகப் படமாக்கப்பட்டிருக்கிறது.

எனவே இப்படிப்பட்ட கீழ்த்தரமான படங்களை அனுமதித்து காலஞ்சென்ற நமது மாபெரும் தியாகிகளின் மாசற்ற பெயருக்கு இழுக்கு ஏற்பட விடலாகாதென்று கலைநேயர்கள், தேசபக்தர்கள் அனைவரும் குரல் எழுப்ப வேண்டும். தியாகிகளின் வாழ்க்கைப் படமாக்கப்படுவதால் நமது தேசபக்தி கூர்தீட்டப்பட்டு நாம் உத்வேக மடையக்கூடிய போக்கில் இருத்தல் வேண்டும். அதை விடுத்து வெறும் காசுபறிக்கும் நோக்கத்திற்காக இந்த வீரர்களின் பெயர்களை ஆயுதமாக்கி நெறிகெட்ட முறையில் வெளியிடப்படும் படங்களைத் தடை செய்யவேண்டும் என்று தேசம் பூராவும் திரண்டெழுந்து கிளர்ச்சி பொங்கவேண்டும்.

—நே. ஆர்.

# போலீஸ் தலையீட்டை நிறுத்த

## பழிவாங்குதலைத் தடுக்க

### தமிழகமெங்கும் ஆர்ப்பாட்டம்

தொழிற் சங்க ஊழியர்களைப் பழிவாங்குவதையும், முதலாளிகளுக்கு ஆதரவாக, போலீஸ் அதிகாரிகள் தொழிலாளர் கூட்டங்களைத் தடைசெய்வதும், கேஸ் போடுவதுமான முறையில் தலையிடுவதையும் எதிர்த்து, த. நா. தொ. சங்க காங்கிரஸின் வேண்டுகோளுக்கிணங்க, 8:8-54ல் தமிழ்நாடு முழுவதும் கண்டனக் கூட்டங்கள் நடத்தினார்கள்.

**காவேரி நகரில்**

காவேரி நகரில், 3 ஷிப்டுகளிலும் வேலை செய்யும் தொழிலாளர்கள், ஷிப்டுக்கு 300 பேர் வீதம் கண்டன கோஷங்களை முழக்கி, ஊர்வலம் நடத்தி, ஆர்ப்பாட்டம் செய்தார்கள்.

**புதுக்கோட்டையில்**

புதுக்கோட்டை சுருட்டு, புகையிலைத் தொழிலாளர் சங்கப் பொதுக்கூட்டத்தில், காவேரி மில், சமண சமுத்திரம் மில்களில் போலீஸ் தலையீடு அதிகரித்து வருவதைக் கண்டித்து, திருச்சி ஜில்லா சுருட்டு. புகையிலைத் தொழிலாளர் சங்க உபதலைவர், எஸ். அய்யாச்சாமி. மற்றும் உமாநாத், வி. நாகு, சமண சமுத்திரம் கணபதி, ராமச்சந்திரன் முதலியோர் பேசினார்கள்.

**நெல்லையில்**

நெல்லையில், ரயில்வே, தாளையூத்து சிமிண்ட், பீடி, அச்சு ஆகிய தொழிற் சங்கங்களின் சார்பில் கூட்டாகக் கொண்டாடப்பட்டது. சிமிண்டு தொழிலாளர்கள், 250 பேர் தாழையூத்திலிருந்து ஊர்வலமாக வர, அதை தச்சநல்லூர் பாத்திரத் தொழிலாளர்கள் 50 பேர் வரவேற்று கலந்துகொள்ள ஜங்ஷனுக்கு வரும் வழியில் செய்யது பீடி பாக்டரிமுன் நூற்றுக் கணக்கில் திரண்டு நின்ற பீடித் தொழிலாளர்களும், அச்சுத்தொழிலாளர்களும், ரயில்வே தொழிலாளர்களும் ஊர்வலத்தில் கலந்து கொண்டு மிகப்பெரிய ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள். பிறகு தாம்பிரபாணி ஆறில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், சிமிண்டு தொழிலாளர் தலைவர் என். ஷண்முகம், காரியதரிசி, ஆர். கணபதி, பாலவிநாயகம், திருநாவுக்கரசு, நாகராஜன், மைதீன் முதலியவர்கள் பழிவாங்குவதை எதிர்த்துப் பேசினார்கள்.

சிமிண்டு தொழிற்சங்க காரியதரிசி கணபதியையும் மற்றும் பலரையும் வேலைக்கு எடுத்துக்கொள்ளும்படி தீர்மானம் நிறைவேறியது.

**வால்பாறை**

இங்கு ஆனைமலைத் தோட்டத் தொழிலாளர் சங்க சார்பில், சங்கத் தலைவர் மஜூம் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில், போலீஸ் தலையீட்டைக் கண்டித்து, பொள்ளாச்சி தோழர்கள் என். பழனிச்சாமி, ராமலிங்கம், சங்க காரியதரிசி ஏ. ராமநாதன் முதலியோர் பேசினார்கள்.

சோலையார் எஸ்டேட்டில் பழிவாங்கப்பட்ட சங்க ஊழியர்கள் ரெங்கசாமி, சுப்பிரமணியம் உள்பட 6 பேரையும், பார்லே நிர்வாகத்தினால் பழிவாங்கப்பட்ட அந்தோணியையும் வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டன.

# ஈட்டிமுனை

## ஐக்கிய தமிழகப் போராட்டமும் பி. சோ. கட்சியின் பித்தலாட்டமும்

வெருண்டெழுந்த மக்களின் காலுதைபட்டு, சரிந்து கொண்டிருக்கிறது காங்கிரஸ் கட்சி. அந்த காங்கிரஸ் கட்சிக்கு முட்டுக் கொடுப்பதே பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் பிரதான கொள்கை! இப்படி நாம் சொன்னால், உடனே பி. சோ. தலைவர்களுக்கு உடலெல்லாம் வியர்க்கிறது. கண்கள் சிவக்கின்றன. உதடுகள் துடிக்கின்றன. "படபடத்துப் பயனில்லை, பாருங்கள் திரு-தமிழகத்தில் பட்டம் தாணுவின் துப்பாக்கி தர்ப்பாரை! இது தான் ஐக்கிய தமிழகம் அமைப்பதற்காக நீங்கள் பாடுபடும் லக்ஷணமோ?" என்று கேட்டால் அவர்கள் தரும் பதில் என்ன தெரியுமா?

**மத்திய சர்க்காரை எதிர்க்க வேண்டுமாம்!**

திருவாங்கூர் தமிழ் நாடு பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கமிட்டி 1-8-54ல் கூடி, "ஐக்கியத் தமிழகத்துக்காக மத்திய சர்க்காரை எதிர்த்துப் போராடினால் நாங்களும் கலந்து கொள்ளத் தயார்" என்று தீர்மானம் நிறைவேற்றியது. நாம் கேட்கிறோம் எதற்கு இந்த வீருப்பு என்று! இப்படித் தான் தி. மு. க. பொதுச் செயலாளர் அண்ணாத்துரையும் சொல்லிப் பார்த்தார். 'பட்டத்தை-எதிர்க்க வேண்டாம்; டில்லியை எதிர்ப்போம்' என்று! ஆனால் திருவனந்தபுரத்துக்கும் டில்லிக்கும் உள்ள இணைப்பை இன்னதென்று அறியாத அப்பாவிகள் அல்ல திரு-தமிழக மக்கள். தாடிக்கொரு சீயக்காய் தலைக்கொரு சீயக்காயா? ஒரே சீயக்காயை இரண்டுக்கும் போட்டு தேய்க்கிற தேயிலே, திருவனந்தபுரம் சிதறும், டில்லி நகரம் பதறுமென்பதை திரு-தமிழ் மக்கள் அறிவார்கள். அதனால்தான் வீறுகொண்ட எரிமலைபோல் வெடித்தார்கள். டில்லி கதறிற்று. பட்டம் பதறினர் இதுவொருபுற மிருக்கட்டும்.

**ஐக்கிய தமிழகமா?**

ஐக்கிய தமிழகம் அமைவதை ஆதரிப்பதாக இந்த பி. சோ. தலைவர்கள் டமாரமடிக்கிறார்கள். யாரிடம் இந்த டமார ஆட்டம்? "திரு-தமிழகத்தையும் உள்ளிட்ட தற்போதைய திரு-கொச்சி ராஜ்யமே என்றென்றும் நீடிக்க வேண்டும்" என்று பி. சோ. கட்சி முதலமைச்சர் பட்டம் தாணுப்பிள்ளை பகிரங்கமாகச் சொன்னாரா இல்லையா? இல்லையென்று சொல்லுவதற்கு எந்த பி சோ. தலைவருக்காவது துணிச்சல் உண்டா என்று கேட்கிறோம். அதுதான் போகட்டும்.

திரு-தமிழகத்தை தாய்த் தமிழகத்துடன் சேர்க்குமாறு, சென்னை சர்க்கார் மத்ய சர்க்காரை வற்புறுத்த வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஜீவானந்தம் பிரேரேபணை செய்தபோது, அதை காமராஜ் சர்க்கார் நிராகரித்தபோது கண்டனத்தின் அறிகுறியாக கம்யூனிஸ்டு எம்.எல்.ஏ. க்களெல்லாம் சட்டசபைக் கூட்டத்தில் கலந்துகொள்ளாமல் வெளியேறினார்களே, அப்போது ஐக்கிய தமிழகம்தான் எங்கள் கொள்கை என்று டமாரமடிக்கும் இந்த பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் எம்.எல்.ஏ.களும் வெளியேற வேண்டாமா? வெளியேறினார்களா? வெளியேறவில்லை! ஏன்? அல்லது நிராகரித்ததை ஆட்சேபித்து யாராவது வாயாவது திறந்தார்களா? அதுவுமில்லை. திரு-தமிழகத்தைப்பற்றி இவர்களின் கொள்கை இத்துடன் இருக்கட்டும்.

**பாண்டிச்சேரியிலே**

பாண்டிச்சேரியை விட்டு வெளியே கிளம்பினால், பிரஜா சோஷலிஸ்ட் தலைவராகக் காட்சியளிப்பார் சோஷலிஸ்ட் ஆசிரியர் எஸ். ஆர். சுப்ரமணியம். ஆனால் பாண்டிச்சேரியில் நுழைந்துவிட்டால் தேசிய காங்கிரஸ் தலைவராக மிளிர்வார். இவரது கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தை ஒருபுறமிருக்கட்டும்.

இந்த தேசிய காங்கிரஸ் தலைவர்கள் என்ன செய்கிறார்கள்? பிரஞ்சிந்திய மக்களின் விடுதலைப் போராட்டத்தை உத்வேகப் படுத்துகிறார்களா? கிடையாது. 1947 ஆகஸ்டிலே, அலைஅலையாய் மக்கள் திரண்டெழுந்து, பிரஞ்சு ராணுவக் கிடங்குகளை முற்றுகையிட்டு அதிகாரிகளைக் கதறவைத்த போது, இந்த தேசிய காங்கிரஸ் எனும் பி. சோ. தலைவர் எஸ். ஆர். சுப்ரமணியமும் இதரரும், அந்த சுதந்திரப் போராட்டத்தை, அவசரப்பட்ட இயக்கம், கம்யூனிஸ்ட் கலாட்டா என்று கூறி அவதூறு செய்தார்கள். பிரஞ்சுக் கையாளான குபேர் குண்டர்களுக்கு அடுத்த இரண்டாவது படைவரிசையானார்கள். அதுதான் போகட்டும், இப்பொழுதுதான் என்னவாம்?

இந்த 1954 ஆகஸ்டு 9-ல்; என்றுமில்லாத உத்வேகத்துடன் போராட்டத்துக்கு புதுவை மக்கள் தயாராகிக்கொண்டிருந்த போது. இந்த தேசிய காங்கிரஸ் எனும் பிரஜாசோஷலிஸ்ட் தலைவர் எஸ்.ஆர். சுப்ரமணியத்தின் ஆட்கள் கடைகடையாய்ச் சென்று, "48 மணி நேரத்தில் சுதந்திரம் வரப் போகிறது. கடை அடைக்காதீர்கள். ஆர்ப்பாட்டம் செய்யாதீர்கள்" என்று சீர்குலைவு வேலை செய்தார்கள். எப்படியும் போராட்டம் உத்வேகமாக வெடிக்கும் என்பதைத் தெரிந்தவுடன், அதன் உத்வேகத்தை தணிக்க கொடிகூட இல்லாமல் ராம்நாம பஜனை கோஷ்டி அனுப்பினார்கள்.

குபேர் குண்டர்களின் விடுதலைக் காங்கிரசும் "சோஷலிஸ்ட்" ஆசிரியரின் தேசிய காங்கிரசும் செய்த சீர்குலைவுகளையும் மீறி, பிரஞ்சு ஏகாதிபத்தியத்தின் தாக்குதலையும் முறியடித்துக்கொண்டு புதுவை நகரம் ஆகஸ்டு 9-ல் பொங்கியெழுந்தது

**வெட்கமும் கெட்டு வெளிப்பட்ட பிறகு**

சுருக்கமாகச் சொன்னால், திரு-தமிழகம் தாய்த் தமிழகத்துடன் சேருவதை விரும்பவில்லை காங்கிரஸ். அதே கொள்கை தான் பிரஜா சோஷலிஸ்ட் கட்சிக்கும்.

பிரஞ்சிந்திய விடுதலைப் போராட்டம் தீவிரமாவதை காங்கிரஸ் விரும்பவில்லை. அதே கொள்கைதான் பிரஜா சோஷலிஸ்ட் கட்சிக்கும்.

காங்கிரஸ் கொள்கையும் பிரஜா சோஷலிஸ்ட் கொள்கையும் ஒன்றுதான் என்று நாம் புட்டுக் காண்பித்தால் குட்டு உடைபடுகிறதே என்று குதிக்கிறார்கள் பி. சோ. தலைவர்கள்.

வெட்கமும் கெட்டு
வெளிப்பட்ட மூளிக்கு
முக்காடு ஏதுக்கடி—குதம்பாய்
முக்காடு ஏதுக்கடி.

—ஐ. மா. பா.

# உணவு தர வழியற்ற...

(மத்திய பக்கம் தொடர்ச்சி)

குறைப்பு, நிலவுடைமைக்கு வரம்பு கட்டுதல் போன்ற பிரச்சினைகளை உட்கொண்ட ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இதை விமர்சனம் செய்யுமுறையில் பம்பாயிலுள்ள பெரும் முதலாளிகளின் வாரப் பத்திரிகையான 'காமர்ஸ்' குறிப்பிட்டதாவது:

"தீர்மானத்தில் சில பகுதிகள் குறிப்பாக நிலச்சீர்திருத்தம் பற்றிய பகுதிகள் பொதுஜனங்களிடம் பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் செய்யப்பட்டவை. எனவே அவற்றைப் பாரதூரமாகக் கருத வேண்டியதில்லை. ஏனென்றால் இன்றுள்ள காங்கிரஸ் கட்சியில் பெரிய நிலவுடைமையாளர்கள் பலர். எனவே நிலச்சீர்திருத்தங்கள் அமுலாக்கப்படும்போது அதன் தன்மையைப் பெரிய அளவுக்குக் குறைத்துவிடுவார்கள்."

இந்த நிர்ணயிப்பு எத்தனை அப்பட்டமானது என்பதை திரு-கொச்சி ராஜ்யத்தில் பி. சோ. மந்திரி சபை கொண்டுவந்த எழு நிலச்சீர்திருத்த மசோதாக்களைப் பற்றி காங்கிரஸ் கட்சி கையாண்ட போக்கிலிருந்து எடுத்துக்காட்டலாம். இந்த மசோதாக்கள் காங்கிரஸ் சர்க்கார் ஏற்கெனவே ஏற்றுக்கொண்டுள்ள கொள்கைகளிலிருந்து ஒரு அங்குலம்கூட அதிகப்படியாகச் செல்லவில்லை.

**விசித்திர வாதம்**

காணத்துக்குக் குத்தகை — நிலவுடைமைக்கு வரம்பு கட்டி உபரி நிலத்துக்கு குத்தகை அல்லது விலை, குடியிருப்போர்களை வெளியேற்றுவதைத் தடுப்பது, திருவிதாங்கூரிலுள்ள நிலவரி முறையை கொச்சிக்கு விஸ்தரிப்பது, ஜமீந்தாரி ஒழிப்புப்போன்ற சட்டம், குத்தகைக்காரருக்குப் பாதுகாப்பு; அபிவிருத்திக்கு நஷ்டஈடு கொடுப்பது போன்ற எழு பிரச்சினைகளைக் கொண்ட மசோதாக்கள் கொண்டு வரப்பட்டன.

இந்திய அரசியல் சட்டம், திட்டக் கமிஷன் சிபார்சுகள், இவற்றை அனைத்துச் செல்லும் போக்கில் இருந்தாலும்கூட இம் மசோதாக்களை உடனடியாகச் சட்டமாக்கவேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி வற்புறுத்தியது. ஆனால் காங்கிரஸ் கட்சி தன் செல்வாக்கைப் பிரயோகித்து தாமதம் செய்யவைத்தது. பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டுவது என்ற பெயரால் பல மாதங்கள் கடத்தப்படும். விவசாயி மக்களிடையே அதிருப்தி குமுறிவருவதை உணர்ந்தே சர்க்கார் இத்தகைய மசோதாக்களைக் கொண்டு வரும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

இருந்தாலும் காங்கிரஸும், பி. சோ. கட்சியும் உண்மையான நிலச்சீர்திருத்தங்கள் ஒருபுறமிருக்க இந்த மசோதாக்களைக் கூட துரிதத்தில் சட்டமாக்க விரும்பவில்லை. இந்தத் தயக்கத்துக்கும் விருப்பமின்மைக்கும் காரணம் நமது நிலத்திலோ-விவசாயிகளிடையோ எதுவும் தவறு இருப்பதாலல்ல. ஆனால் ஆளும் கட்சியினர் புதிய இந்தியாவென்றும், வெகுஜனத் திட்டங்கள் 'வழிபடும் கோவில்கள்' என்றும் வாய்ப்பந்தல் போட்டுக்கொண்டே பிரச்சினை தீரக் குடும்பக் கட்டுப்பாடு—பிரஜா உற்பத்தி நிர்ணயமே திட்டம் என்று விசித்திரமாக வாதிப்பதே இதற்குக் காரணமாகும்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பாலான தொழிலாளர் உறுப்பினராகச் சேர்ந்துள்ள லேபர் யூனியனுக்கு அங்கீகாரம் நல்குவாரா?

நெய்வேலி சுரங்கத் தொழிலாளருக்குப் பக்கபலமாக தமிழ்நாட்டிலுள்ள எல்லாத் தொழிற்சங்கங்களும் ஆதரவு காட்ட வேண்டும். 'சுதந்திரம் வந்தபிறகு தொழிலாளர்களை இஷ்டப்படி விலக்கமுடியாதபடி சட்டம் போட்டுவிட்டோம்' என்று மார்தட்டிக்கொள்ளும் முதல் மந்திரி காமராஜ நாடார் இந்தப் பழிவாங்குதலை ரத்தாக்க முன்வர வேண்டும்; சொற்படி செயலாற்றவேண்டும்.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

அட்டகாசங்களையும் கண்ணுற்ற தமிழரசு கழகத்தை சேராத பல காங்கிரஸ்காரர்கள்கூட காங்கிரசிலிருந்து இன்று ராஜினாமா செய்து வருகின்றனர்.

இச்சம்பவங்கள் ஒரு விஷயத்தை மேலும் தெளிவாக்குகின்றன. மொழிவழி ராஜ்ய அமைப்பின் பரமவைரியாக அகில இந்தியக் காங்கிரஸின் தலைமையும் அதை அணுவளவும் பிசகாமல் பின்பற்றும் காமராஜர் கோஷ்டியின் தமிழ் நாடு காங்கிரஸ் தலைமையும் உள்ளன என்பது அப்பட்டமாயின.

தமிழ்நாடு காங்கிரஸில் கிஞ்சிற்றேனும் ஜனநாயகம் இல்லை என்பதும், காங்கிரஸே ஏற்றுக்கொண்ட மொழிவழி ராஜ்யக் கொள்கையை அது நிராகரித்துவிட்டது என்பதும் இதன்மூலம் தெளிவாகிவிட்டது.

ஐக்கிய கன்னட ராஜ்யத்திற்காக காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான நிஜலிங்கப்பா பகிரங்கமாக நேரு தலைமையை எதிர்த்துப் போராடுகிறார். அதே போல மகாராஜ்டிர ராஜ்யம் அமைக்க என். வி. காட்கில் பேசுகிறார். அதற்காக பல கட்சிகளுடனும் ஒன்றுபட முன் வருகிறார். விசால ஆந்திரம் அமைக்க என். சஞ்சீவி ரெட்டி பகிரங்கமாக அகில இந்திய காங்கிரஸ் தலைமையின் விருப்பத்திற்கு எதிராகச் செல்கிறார்.

ஆனால் திரு-தமிழகத்திலே தமிழர்கள் சித்திரவதைக்குள்ளாகும் சமயத்தில் காமராஜர் ஆட்சி வாயைக்கூட திறக்கவில்லை. இதற்குத்தான் 'பச்சைத் தமிழராட்சி' என்று பெயரிடுகின்றனர். வெட்கக்கேடு!

தமிழரசுக் கழகத்தார் காங்கிரஸிலிருந்து வெளியேறியது மொழிவழி ராஜ்யக் கோரிக்கையில் அவர்கள் கொண்டுள்ள உறுதியைக் காட்டுகிறது என்பதில் சந்தேகமில்லை. என்றாலும் அந்தக் கொள்கை வெற்றியடைய, நேரு—காமராஜர் தலைமையிலுள்ள காங்கிரசின் மொழிவழி ராஜ்ய விரோதக் கொள்கையை முறியடிக்க, சகல முற்போக்கு சக்திகளுடனும், ஜனநாயக சக்திகளுடனும் சேர்ந்து நின்று போராடுவதின் அவசியத்தை அவர்கள் உணர்வது மிக மிக அவசியம். மொழிவழி ராஜ்யத்திற்காகப் போராடும் சகல சக்திகளையும் ஓரணியில் திரட்டிப் போராடினால்தான் வெற்றியடைய முடியுமென்பதை அவர்கள் மறுக்கமாட்டார்கள் என்றே நம்புகிறோம்.

—கே. எம்.

# பார்மோசாவை விட்டு ஓடு!

## அமெரிக்காவிற்கு சீனா எச்சரிக்கை

கொரியா, இந்தோசீனா பிரச்னைகளைத் தீர்ப்பதற்காக ஒரு பக்கம் ஜினீவா மகாநாடு நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆனால் அதே சமயம் தூரக்கிழக்கில் அமெரிக்க ராணுவ நிபுணர்கள் தங்கள் யுத்த நடவடிக்கைகளைத் தீவிரமாக முடுக்கிவிடத் தொடங்கினார்கள். டைவான் (பார்மோசா) தீவுக்கருகில் சியாங்கே ஷேக் ராணுவத்துடன் கடற்படை ஒத்திகை நடத்தும் பொருட்டு அமெரிக்க தளபதி அட்மிரல் ஜான்வில் தன்பரிவாரங்கள் புடைசூழ அங்கு வந்து சேர்ந்தார்.

ஜினீவா மகாநாட்டை சீர்குலைப்பதற்காக, செய்த தங்களுடைய சதித் திட்டங்கள் பலனளிக்கவில்லையென்று தெரிந்தவுடன், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் ஜெனரல் வான் பிளீட்டை கிழக்காசியாவிற்கு அனுப்பினார்கள். அமெரிக்க ஜனாதிபதியின் விசேஷ தூதர் என்ற ஹோதாவில் பேச்சு வார்த்தைகளை நடத்தி தென் கொரியா, ஜப்பான், டைவான், பிலிப்பைன்ஸ் முதலிய நாடுகளின் ராணுவ பலத்தை விஸ்தரிக்க அவர் திட்டங்கள் வகுத்தார்.

இந்தோ சீனப் பிரச்னையைத் தீர்ப்பதில் ஜினீவா மகாநாடு வெற்றி பெற்ற அதே நாளில் அமெரிக்க ஜனாதிபதி மற்றொரு போர் வெறிப் பிரகடனம் செய்தார். அமெரிக்காவிற்கும், டைவானில் (பார்மோசாவில்) பதுங்கிக் கிடக்கும் சியாங் கும்பலுக்குமிடையே ராணுவ ஒப்பந்தம் செய்து கொள்ளப்படும் என்று அறிவித்தார்.

### டைவான் அமெரிக்கா வசம்

இந்தோ சீனாவில் யுத்த நிறுத்தம் ஏற்படாமல் தடுக்க தன்னாலியன்றவரை அமெரிக்கா முயற்சித்துப் பார்த்தது. ஆனால் அமெரிக்க விருப்பத்திற்கு மாறாக, ஜினீவா மகாநாட்டில் இப் பிரச்னையில் சுமுகமாக முடிவேற்பட்டு இந்தோசீனாவில் யுத்த நிறுத்தம் செய்யப்பட்டது. ஆதலால் ஆத்திரமடைந்த அமெரிக்க வெறியர்கள் தூரக்கிழக்கில் எப்படியாவது மீண்டும் யுத்தத் தீயை மூட்டிவிடுவதற்காகப் பெரும் பாடு படுகிறார்கள். மக்கள் சீனா மீது சியாங் படைகளை உசுப்பி விடுவதற்காகத் திட்டங்கள் தயாராகின்றன. இந்த ஆத்திரமூட்டும் தாக்குதல்களுக்கெல்லாம் டைவான் (பார்மோசா) தீவுதான் தளமாக விளங்குகிறது.

டைவான் தீவு சீனாவிற்கு சொந்தமானது. சென்ற நூற்றாண்டின் இறுதியில் இந்தத் தீவை ஜப்பானியர்கள் கைப்பற்றி இதற்கு பார்மோசா என்று பெயர் மாற்றினார்கள். இரண்டாவது உலகப்போரில் ஜப்பானை முறியடித்தவுடன், இந்த தீவை சீனாவிற்கே திருப்பித் தருவதென கெய்ரோவிலும், யால்டாவிலும் கூடி வல்லரசுத் தலைவர்கள் பிரகடனம் செய்திருக்கிறார்கள்.

### படையெடுப்பு முயற்சி

இந்த சர்வதேச ஒப்பந்தங்களையும், பிரகடனங்களையும் குப்பையில் எறிந்து விட்டு, அமெரிக்கா டைவான் தீவை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. 'மக்கள் சீனாவிற்கு எதிராக யுத்த நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்தி, அதைத் தொடர்ந்து பயமுறுத்தி வருவதற்கு டைவான் ராணுவ தளம் அமெரிக்காவிற்கு மிகவும் இன்றியமையாததாகும்' என்று அமெரிக்க உதவி ராஜாங்கக் காரியதரிசியான ராபர்ட்சன் அறிவித்தார். 'நீண்ட நெடும் சீனக் கடற்கரையை சதா சர்வ காலமும் தாக்கி இம்சைப்படுத்தி, ரத்தம் வடியும் பச்சைப் புண்களாக அதை பிய்த்துக் கிழிப்பதற்கு' டைவான் தீவு அமெரிக்காவிற்கு மிகவும் அவசியமாகும் என்று ரீடர்ஸ் டைஜஸ்ட் எனும் அமெரிக்கப் பத்திரிகை எழுதியது. இந்தத் தீவில் இருந்து கொண்டு சீனாவின் மீது படையெடுக்கலாம் என்றும் அது குறிப்பிட்டது.

இந்தோ சீனாவில் யுத்த நிறுத்தம் ஏற்பட்ட பின்னர் அமெரிக்க கடற்படை, விமானப்படை உதவியுடன் சியாங்கின் கூலிப் படைகள் சீனாவின் மீது சின்னஞ்சிறு தாக்குதல்கள் நடத்துவது நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. சென்ற மாதம் ஹைனான் தீவுக்கருகில் ஒரு பிரிட்டிஷ் விமானத்திற்கு ஏற்பட்ட விபத்தை சாக்காகக் கொண்டு, அமெரிக்க யுத்தக் கப்பல்களும், விமானங்களும் நேரடியாக சீனப் பிரதேசத்தில் புகுந்து ஆக்கிரமிப்பு நடவடிக்கையில் ஈடுபட்டதும், இரண்டு சீன விமானங்களை சுட்டு வீழ்த்தியதும் அனைவரும் அறிந்ததே.

### கடல் கொள்ளை

சீனாவிற்கு அருகில் செல்லும் எல்லா தேசங்களின் கப்பல்களையும் அமெரிக்க உதவியுடன் சியாங் கொள்ளைக் கூட்டம் தாக்கிப் படுசேதம் விளைவிக்கிறது. கப்பல்களையே கைப்பற்றி, அதிலுள்ள பொருள்களை சூறையாடுகிறது. இதுவரை பிரிட்டன், டென்மார்க், போலந்து, சோவியத் யூனியன் முதலிய நாடுகளின் கப்பல்கள் இவ்விதம் தாக்கப்பட்டிருக்கின்றன.

டைவான் தீவை அமெரிக்கா ஆக்கிரமித்துக் கொண்டதிலிருந்து கணக்கு வழக்கற்ற தடவைகள் சீனாமீது சியாங் கழிசடைகளை அமெரிக்கா ஏவி விட்டிருக்கிறது. அமெரிக்க ஏழாவது கடற்படையின் பாதுகாப்பு உதவியுடன் சியாங்கின் கொலைகாரர்கள் சீனக் கடற்கரைமீது திடீர், திடீரென்று தாக்குதல் தொடுத்து உயிர்ச்சேதமும், பொருட்சேதமும் ஏற்படுத்தி வருகிறார்கள். சீனாவிற்குள் நாச வேலைகளைச் செய்வதற்காக அமெரிக்க விமானங்கள் சியாங்கின் ஒற்றர்களை இரவு நேரத்தில் பாரசூட் மூலம் இறக்கி வருகிறது. கடந்த இரண்டு மாதங்களில் மட்டும் சீனா மீது தாக்குதல் தொடுத்த 15 அமெரிக்க-சியாங் விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டிருக்கின்றன.

நன்றியுள்ள நாய் எஜமானனுக்கு முன்னாலேயே ஓடுவதைப்போல, சியாங்கே ஷேக்கும் சீனாமீது படையெடுக்கப் போவதாக சலசலத்து வருகிறான். இதற்காக டைவானில் கட்டாய ராணுவ சேவை உத்திரவு பிறப்பித்துள்ளான். அமெரிக்க ஆயுத தளவாடங்கள், கடற்படை, விமானப் படையின் உதவியினால்தான் சியாங் இதுகாறும் உயிர் பிழைத்துள்ளான் என்பதை உலகம் நன்கு அறியும். இல்லையெனில் சரித்திரத்தின் குப்பைக் கிடங்கில் இருந்த இடம் தெரியாது சியாங்கும்பல் என்றோ புதைந்து அழிந்து போயிருக்கும்.

### அரசியல் பிணங்களுக்கு புத்துயிர்

டைவானில் (பார்மோசாவில்) பதுங்கிக் கிடக்கும் இந்த அரசியல் பிணங்களுக்கு புத்துயிர் ஊட்ட அமெரிக்கா பகீரதப் பிரயத்தனம் செய்துவருகிறது. சியாங் கும்பலுடன் பரஸ்பர ராணுவ ஒப்பந்தம் செய்து கொள்வதன் மூலம் கிரந்தரமாக டைவான் தீவில் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டிக்கொள்ள அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் விரும்புகிறார்கள். இதைத்தளமாகக்கொண்டு, சியாங்கின் கூலிப்படையை பீரங்கித் தீனியாக்கி சீனாமீது படையெடுப்பதே அமெரிக்க வெறியர்களின் நோக்கம்.

சீனாமீது படையெடுக்கும் இதே நோக்கத்துடன்தான் தென்கிழக்காசிய ராணுவக் கூட்டணியை அமெரிக்கா உருவாக்கி வருகிறது பிலிப்பைனில் தன்னுடைய தளங்களை மிகவும் அதிகமாகப் பெருக்கிப் பலப்படுத்தி வருகிறது. '2-ம் உலகப் போருக்குப்பின் இவ்வளவு ராணுவ பலத்தை அமெரிக்கா இந்தப் பிரதேசத்தில் இப்பொழுதுதான் அதிகரித்திருக்கிறது' என்று அமெரிக்கப் பத்திரிகையான நியூயார்க் டைம்ஸில் ஹான்சன் பால்டுவின் எழுதியிருக்கிறார்.

### சீனமக்கள் உறுதி

டைவான் தீவை அமெரிக்கா ஆக்கிரமித்திருப்பதை மக்கள் சீனா வன்மையாகக் கண்டித்திருக்கிறது. 'டைவான் தீவை விடுதலை செய்தேதீரவேண்டும்' என்று சீனப்பார்லிமெண்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது 'டைவான் தீவு சியாங்-அமெரிக்கா வசம் இருக்கும்வரையிலும் சீனாவின் பந்தோபஸ்திற்கு அபாயமாகும். எனவே அதை துரிதமாக விடுதலைசெய்யவேண்டும்' என்று சேனாதிபதி ஜெனரல் சூட்டே அறைகூவல் விடுத்திருக்கிறார். 'டைவான் தீவு சீனாவிற்குச் சொந்தமானது. எனவே டைவான் தீவை விடுவிப்பது சீனாவின் சொந்த உள்நாட்டு விஷயம். இந்த உள்நாட்டு விஷயத்தில் அன்னியர்கள் தலையிடுவதை நாங்கள் அனுமதிக்கமாட்டோம். சியாங் கொள்ளைக் கும்பலின் உறைவிடமாய் இருக்கும் டைவானை விடுதலை செய்யப்போகிறோம். எங்களுடைய இந்த உள்நாட்டு விஷயத்தில் அமெரிக்கா குறுக்கிட்டால், அதனால் ஏற்படும் சகல விளைவுகளுக்கும் அமெரிக்காதான் பொறுப்பாளியாகும்' என்று சீனப் பிரதமர் சௌ-என்லாய் எச்சரித்திருக்கிறார்.

### அமெரிக்கா நேரடித் தலையீடு

ஆனால் சீனாமீது தாக்குதல் தொடுப்பதற்கு சியாங் கும்பலுக்கு சகல உதவியும் செய்துவரும் அமெரிக்கா, டைவானை சீன மக்கள் சேனை விடுதலை செய்வதை அனுமதிக்க முடியாது என்று அறிவித்திருக்கிறது. 'டைவானை விடுவிக்க சீனா முயற்சித்தால் அமெரிக்க கடற்படையும், விமானப்படையும் இதில் குறுக்கிடும்' என்று அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவரும்; அயல்நாட்டு மந்திரி டல்லசும் பகிரங்கமாக அறிவித்து விட்டார்கள். அதாவது சீனாவின் சொந்த விஷயத்தில், உள்நாட்டுப் போரில், அமெரிக்கா நேரடியாகத் தலையிடும் என்று ஐசனோவர் கூறிவிட்டார். அமெரிக்காவின் ஆக்கிரமிப்பு யுத்தவெறி இதன் மூலம் மேலும் அம்பலமாகிறது. தூரக்கிழக்கில் எப்படியாவது யுத்தத் தீயை மூட்டிவிடுவதற்கு அது செய்யும் முயற்சிகள் பகிரங்கமாகின்றன. தென்கிழக்காசிய ராணுவக் கூட்டணியின் உள்நோக்கம் தெட்டத் தெளிவாகிறது.

## சோவியத் நாட்டுக்கு நம் தூது கோஷ்டிகள்

இந்திய-சோவியத் நட்புறவு சமீப காலத்தில அதிகரித்துவருகிறது. சோவியத் நாட்டைப்பற்றி வேணுமென்றே அவதூறு பொழிந்துவரும் நாற்ற வாயர்களுக்கு இதனால் நடுக்கமேற்பட்டிருக்கிறது. விஷயம் தெரியாமல் கண்டபடி பேசியவர்களுக்கு உண்மை உணருவதற்கு நல்ல வாய்ப்பு ஏற்படுகிறது.

### பெண்கள்

அகில இந்திய பெண்கள் சம்மேளனத்தின் மாஜி தலைவி ஸ்ரீமதி ராமேஸ்வரி நேரு, ஸ்ரீமதி அன்னுமஸ்கிரின் எம்.பி., சுசேதா கிருபளானி எம். பி, கமலாதேவி சட்டோபாத்யாயா, ஹஜராபீகம் முதலியவர்கள் சோவியத் நாடு சென்று திரும்பினார்கள்.

### தொழிலாளர் தலைவர்கள்

அ. இ. தொ. சங்க காங்கிரஸ் சார்பில் சத்யப் பிரிய பானர்ஜி, இந்து மஸ்தூர் சபா பொதுக்காரியதரிசி ஆர். சாஸ்திரி, ஐக்கிய தொழிற்சங்க காங்கிரஸ் சார்பில் ஸ்ரீகண்டன் நாயர் எம். பி. முதலியவர் சோவியத்நாடுசென்று திரும்பினார்கள்.

அ. இ. சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள் சம்மேளனத் தலைவர் சிபன்லால் சாக்ஸேனா தலைமையில், ஒரு கோஷ்டி சென்று திரும்பியது

### ரயில்வே தலைவர்கள்

சோவியத் ரயில்வே தொழிலாளர் சம்மேளன அழைப்பின்பேரில் தோழர்கள் அனந்தநம்பியார், கே. டி. ராஜு முதலியவர்களும் இந்திய தேசிய ரயில்வே தொழிலாளர் சம்மேளன உபதலைவர் ராமச்சந்திரனும் சோவியத் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறார்கள்.

### ரயில்வே அதிகாரிகள்

இந்திய சர்க்கார் சார்பில் 3 பெரிய ரயில்வே அதிகாரிகள் சென்றிருக்கிறார்கள்.

### ஆசிரியர்கள், மாணவர்கள்

மாஸ்கோ சர்வ கலாசாலையின் அழைப்பின் பேரில், இந்தியாவிலுள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களிலிருந்து ஆசிரியர்களும் மாணவர்களும் அடுத்த மாதம் புறப்படுகிறார்கள்.

### விவசாய நிபுணர்கள்

மத்திய சர்க்காரின் உதவி விவசாய மந்திரி தலைமையில் விவசாய நிபுணர்கள் 3 பேர் போயிருக்கிறார்கள். மேலும் 10 பேர் அடுத்த மாதம் போகிறார்கள்.

### முதலாளிகள்

சோவியத் யூனியனில் வியாபார சந்தர்ப்பங்களை அறிந்து வருவதற்காக இந்திய முதலாளிகள் சார்பில் கஸ்தூரிபாய் லால்பாய் தலைமையில் முதலாளிகள் தூது கோஷ்டி செல்லுகிறது.

### கலைஞர்கள்

மத்திய அரசாங்க சுகாதார இலாகா உதவி மந்திரி ஸ்ரீமதி மரகதம்மாள் தலைமையில், வீணை வித்வான் கே. எஸ். நாராயணசாமி, ஸ்ரீமதி சூரியகுமாரி, ஸ்ரீமதி தாராசவுத்ரி, மலையாள நடன நிபுணர் கோபிநாத் முதலியவர்கள் சோவியத் நாட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள்.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

பிரெஞ்சு பட்டாளங்கள் பாண்டிச்சேரி காரைக்காலை ஒட்டியுள்ள நகரங்களையும் கிராமங்களையும் சூழ்ந்துகொண்டு மக்களைக் கைது செய்தும் பொய்க்கேஸ் ஜோடித்தும் பயங்கர அடக்குமுறைத் தாண்டவமாடுகின்றன.

போராடிவரும் பிரெஞ்சு மக்களுக்கு இந்திய சர்க்கார் செய்ய வேண்டிய கடமை ஒன்றுண்டு. வெறும் ஹேஷ்யங்களை நம்பிக் கொண்டு தன்னந்தனியாகத் தவிக்கவிடாமல் சமரசப்பேச்சுக்களின் விபரம் என்ன, இன்றுள்ள நிலைமை என்ன என்பதைத் திட்டவட்டமாக எடுத்துக்கூற வேண்டியது அதன் பொறுப்பாகும்.

## சீனாவில் ஆட்லி

இவ்விதம் நாளுக்கு நாள் தீவிரமாக மக்கள் சீனாமீது அமெரிக்க-சியாங் கும்பல் ஆத்திரமூட்டும் தாக்குதல்கள் தொடுத்துக்கொண்டிருக்கும் இதே சமயம், மற்றொரு மிக முக்கிய விசேஷ நல்ல சம்பவமும் நடைபெற்றிருக்கிறது.

பிரிட்டிஷ் தொழிற் கட்சித் தலைவரான ஆட்லி தலைமையில், பெவான், மார்கன் பிலிப்ஸ் முதலிய எட்டுப் பேர்கொண்ட தூது கோஷ்டியொன்று சீனாவைச் சுற்றிப் பார்ப்பதற்காக விஜயம் செய்திருக்கிறது.

'சீனாவை ஐ.நா.வில் சேர்க்க வேண்டும். சீனாவுடன் நட்புறவை வளர்த்து, வியாபாரத்தைப் பெருக்கவேண்டும்' என்ற கிளர்ச்சி பிரிட்டிஷ் மக்களிடையே தீவிரமாகப் பரவி பலப்பட்டு வருகிறது. பிரிட்டனுடன் நல்லுறவை வளர்க்க வேண்டுமென்று சீன சர்க்கார் செய்துவந்த இடையறாத முயற்சிகளின் காரணமாக பிரிட்டிஷ் மக்களின் இந்த நேச உணர்ச்சிகள் மேலும் உறுதிப்பட்டுள்ளன.

### விசேஷ சம்பவம்

மக்கள் சீனாவின் சமாதான அபிலாஷைகளை ஜினீவா மகாநாடு உலகுக்குப் பறைசாற்றியது. ஜினீவா மகாநாட்டின் விளைவாக பிரிட்டனுக்கும், சீனாவிற்குமிடையே மேலும் நெருக்கமான நட்புறவு ஏற்பட ஏதுவாயிற்று. பிரிட்டனுடன் ராஜதந்திரஉறவு கொள்ள சீன சர்க்கார் முடிவு செய்தது. பிரிட்டனுக்கு ஒரு சீன வியாபார தூது கோஷ்டி கூட விஜயம் செய்தது. இவ்விதம் சீன-பிரிட்டிஷ் மக்களிடையே நேசப்பான்மை வளர்ந்து வரும் இச்சமயத்தில் முன்னாள் பிரதம மந்திரியாக இருந்த ஆட்லியின் தலைமையில் முக்கியமான தொழிற்கட்சித்தலைவர்கள் கொண்ட தூதுகோஷ்டி சீனாவிற்கு விஜயம் செய்வது மிகவும் விசேஷமான சம்பவமாகும்.

பழம்பெரும் நாடான சீனா, பற்பல நூற்றாண்டுகளுக்குப் பின், துயில் நீங்கி, புத்துயிர் பெற்று தன் பூதாகாரமான மனித சக்தியைப் பயன் படுத்தி பிரம்மாண்டமான அணைக்கட்டு திட்டங்களைக் கட்டி முடித்திருப்பதை பிரிட்டிஷ் தலைவர்கள் பார்ப்பார்கள். நவ நவீன யந்திர தொழிற்சாலைகள் நாடெங்கும் ஓங்கி வளருவதைக் காண்பார்கள். நகரங்களிலும, கிராமங்களிலும் மக்களின் வாழ்க்கைத் தரம் அதிகரித்திருப்பதையும், சீன மக்கள் சந்தோஷமாக வாழ்வதையும் அவர்கள் அறிந்து கொள்வார்கள். நிர்மாண வேலைகளில் ஈடுபட்டிருக்கும் சீன மக்களின் இருதய பூர்வமான சமாதான அபிலாஷைகளையும் நேரடியாகக் கண்டு தெரிந்து கொள்வார்கள்.

### நட்புறவு பலப்படும்

இந்த மிக முக்கிய தூது கோஷ்டியின் விஜயத்தால் சீன-பிரிட்டிஷ் நட்புறவுகள் மேலும் உறுதிப்படும். சீனாவின் சமாதான அபிலாஷைகளை மேற்கு ஐரோப்பிய நாட்டு மக்கள் மேலும் நன்கு தெரிந்து கொள்வதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

இது மட்டுமல்ல; தொழிற்கட்சி தூது கோஷ்டியின் சீன விஜயத்தால், சீனாவின் மீது படையெடுக்க விரும்பும் அமெரிக்க யுத்த திட்டங்களும் பாதிக்கப்படுகின்றன. இந்த விஜயத்தின் காரணமாக சீனாவைப் பற்றி முதலாளித்துவ நாடுகளுக்கிடையே நல்ல அபிப்பிராயம் ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்று அமெரிக்க வெறியர்கள் அஞ்சுகிறார்கள். ஆதலால் சீனாவிற்கு ஆட்லி கோஷ்டியினர் விஜயம் செய்திருப்பதை வன்மையாகக் கண்டித்து அமெரிக்கப் பத்திரிகைகள் அனைத்தும் ஊளையிட்டிருக்கின்றன. ஆனால் இத்தகைய தாக்குதல் மூலம் பிரிட்டிஷ்-சீன மக்களிடையே பலப்பட்டு வரும் நட்புறவை அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளால் சிதைத்து விட முடியாது. அதற்கு பதிலாக பிரிட்டிஷ் மக்களிடமிருந்து அமெரிக்க வெறியர்கள் தான் மென்மேலும் தனிமைப்படுத்தப்படுவார்கள். அமெரிக்கர்களின் யுத்த திட்டங்கள் தான் மென்மேலும் அம்பலப்படுத்தப்படும்.

—ஜி. ஏ.

Regd. No. M. 5934

Edited, Printed & Published by G. ALAVANDAR, at Janasakthi Press, Subodhaya Buildings, 38 Mount Road Madras-6.
OFFICE: 3, Anthony Street, Madras-14.